# ஊழியன்

## மலர் 10, இதழ் 2

## September 24, 1929

Record no. 148

# Ūl̲iyan̲

## Malar 10, ital̲ 2

## September 24, 1929

Record no. 148

சென்னைப் பதிவு என் கருகூ கசு-பக்கங்கள். தந்தி விலாசம்:—"ஊழியன்"

சந்தா விபரம்.
வருடச் சந்தா ... [illegible]
ஆறுமாதச் சந்தா ... [illegible]
வெளிநாடு வருடச்சந்தா ... [illegible]

# ஊழியன்.

The "Oolian," a Nationalist Weekly.

ஆசிரியன்—ராய. சொக்கலிங்கன்.

நல்லவை வாழ்க! அல்லவை ஆழ்க!!

மலர், கo. காரைக்குடி, சுக்கில-ஞு புரட்டாசி-மீ கூ-உ செவ்வாய்க்கிழமை. இதழ் உ

## மலர்மணம்.

### கலைகள்.

மக்கள் உயர்வடைதற்கு—நாகரிகமெய்துதற்கு—இன்பவாழ்வு வாழ்தற்கு, கலைகள் இன்றியமையாதனவாம். கலைகள் இல்லா நாடு உயர்ந்த மக்களை உடைய நாடாக மாட்டாது; அதனைக்காடு என்று கழறுதல் கூடப்பொருந்தாது. காட்டில் மக்களை இன்புறுத்தும் கண்ணுக்கினிய இயற்கைக் காட்சிகள் பலப்பலவுண்டு. கலைகள் இல்லா நாட்டில்அதுவும்இருத்தல்முடியாது.எனவே கலைகள்இல்லாநாட்டைக்கடும்பாலை நிலத்திற்கே ஒப்பிடலாம். கலைகளே இல்லாத நாடு உலகத்தில் அநேகமாக இருக்க முடியாது. கலைகளின் அளவில் ஏற்றத்தாழ்வு இருக்கலாமேயன்றி அடியோடு எக்கலையும் இல்லாதிருத்தல் அருமை.

* * *

கலைகள் யாண்டு மிகுதியாக இருக்கின்றனவோ ஆண்டு வாழ்மக்கள் அறிவும் இன்பமும் எய்தியார் என்பது வெளிப்படை. கலைகளை எவர் விரும்பவில்லையோ அவரை உயர்வுடை அறிஞர் குழுவில்சேர்த்தெண்ண முடியாது. உயர்வு சிறிதேனும் பெற்றிருப்பாராளுல் அவர் கலைகளை வெறுக்கும் இயல்பு பெற்றிருக்கமாட்டார் என்பது ஒருதலை. மக்கள் இன்பம் நுகர்தற்கு மக்களால் தோற்றுவிக்கப்பட்டனவே கலைகள்.உலகில் மக்கள் செய்யும் செயலனைத்தும் புலனின்பத்தின் பொருட்டேயன்றோ? அவ்வின்பத்தை நல்குவன கலைகள் என்பதை மறுக்குமாறு.எங்ஙனம்?

* * *

ஓவியன் ஓர் அழகிய உருவத்தைச் சித்திரித்தளிக்கின்றான்; சிற்பி வனப்புமிக்க சிலையொன்றைச் செய்கின்றான். அவை கண்டார் கண்ணையும்மனத்தையும் கவர்ந்துவிடுகின்றன. எப்பொருளைக் கொண்டு அவை செய்யப்பட்டன என்பதை நோக்கலாம். செய்வதற்குத் துணைநின்ற பொருள்களில் வியக்கத்தக்க தொன்றுமில்லை. ஓவியக் கலைஞன் கொள்வது சாயமும் கோலுமே. சிற்பி கொள்வது கல்லும் உளியுமே. அவற்றிற் காட்சிக்கினியது ஏதுமில்லை. அவை தொழிற்பட்ட பின்னர்—சித்திரம் சிற்பம் ஆகிய கலைபொருந்தப் பெற்றபின்னர் கவரும் நீர்மை பெற்றுவிடுகின்றன. சாயத்தையும் பாராங்கல்லையும் கண்டு இன்புறுவார் யாரே! சாயமும் கல்லும் மக்களை ஈர்க்கும் தகுதி பெறுவது ஓவியம் சிற்பம் என்னும் கலைகளின் சேர்க்கையாலேயே.

* * *

அழகிய ஓவியமும் சிறந்த சிற்பமும் எல்லோர்க்கும் பொதுவான இன்பந்தருபவை. காட்சி யின்பம் பெறும் அளவில் இவற்றில் வேறுபாடு இருக்கமுடியா. இந்துமதத்தினர்க்குரிய இறை உருவமொன்று சிற்பக் கலையின் திறம் விளங்க ஆக்கப்பெற்றிருக்குமாளுல் அதனைக் கண்டு களிப்பானேயன்றி வெறுப்புக் கொள்ளமாட்டான் வேறு சமயம் பற்றும் அறிஞன். அவ்வாறே பிற சமயக் கடவுளுக்கு வொன்று சிற்பத்திலோ ஓவியத்திலோ சிறந்து காணப்படுமாளுல் அதுகண்டு கண்பெற்ற பயன் பெறுவான் இந்து மதம் கொள்வோன் என்று இயம்பப்படும் அறிஞனும். அறிஞர் கலைத்துறையில் சமய வேற்றுமையும் பிற வேறுபாடும் கண்டு இன்பமிழக்க ஒருப்படார் என்பது திண்ணம். கலைகளில் விரும்பத்தகாத வேறுபாடுகண்டு அவற்றாலாய இன்பம் இழப்பது அறியாமை.ஓவியத்தில் தீட்டப்பட்ட உருவத்தின்கருத்துக்கள்கூடத் தெள்ளிதில்விளங்கும்படி சித்திரித்துக்காட்டப்படுவதை நாம் காணவில்லையா? இவ்வுலகில் அத்துணை எழிலுள்ள உருவம் இருப்பினும் இல்லாதொழியினும் தன் உளத்தே தோன்றும் பேரெழிலை உருவமாக்கி யாவரும் காணும்படி உலகிற்கு அளித்துவிடுகின்றான் ஓவியக் கலைஞன்.

* * *

"ஓவியத் துறைகைபோய ஒருவனைஉருவின் மிக்க
காவலன் ஒருவன் மற்றோர் கன்னி நீ [தீட்டுகென்னத்
தாவரும் எழிலிற் கோட்டத் தானுமக் [நளனுமாக
மேவர இனிது நோக்கி மெய்ம்மயிர் பொடிக்குமன்றே"

என்றார் நைடத நூலார். தமயந்தியானவள், ஓவியத்துறை வல்ல ஒருவனைப் பார்த்து உருவிலே மேம்பட்ட ஒரு ஆணையும் பெண்ணையும் சித்திரித்துத் தரவேண்டுமென்று கேட்டாள். அவ்வாறே தானறிந்தவரையில் எவ்வளவு எழிலொழுக எழுத முடியுமோ அவ்வகையில் ஓவியக் கலைஞன் இருவரை எழுதி ஈந்தான். தமயந்தி அவற்றைப் பெற்று நோக்க அவ் உருக்கள் தானுகவும் நளனுகவுமே இருக்கக் கண்டாள். நள தமயந்தியின் வடிவத்திற்கு மேற்பட்டு ஓவியக்காரனுலுந் தீட்டமுடியாது என்று காட்டப்போந்த இக்கவி அழகு கொண்டது. இதனுல் ஓவியக் கலையின் உயர்வு விளக்கப்பட்டது காவியக்கலை யழகினுல்.

* * *

சிறந்த கலைகளுள் இசைக்கலை ஒன்று. செவிப்புலன் வழியாக உலகத்தைப் பெரிதும் இன்புறுத்துவது இசைக்கலை. இதனைப் பலரும் இன்று நடைமுறையிற் காண்கின்றோம். பண்டை இயற்றமிழ்ப் பெரியாரும் இறைவழிபாட்டுப் பாக்கள் நல்கிய பெரியாரும் இசைக்கலையைப் பெரிதும் போற்றியிருக்கின்றார். ஏழிசையாகவும் இசைப்பயனுகவும் இருக்கின்றார் இறைவர் என்று நம்பியாரூரர் நவில்கின்றார். ஈசன் எந்தை இணையடிநீழல் மாசில் வீணையாக விளங்குகின்றது எனத் திருநாவுக்கரசடிகள் செப்புகின்றார்; "தமிழோ டிசை பாடல் மறந்தறியேன்" என உருகுகின்றார். சம்பந்தமூர்த்திகள் தாம்பாடும் பாடல்களைப் பண்ணில் இசைத்துப் பாடுதற்குப் பாணனாரை உடன்கொண்டு சென்றதாகக் கேட்கின்றோம். இசைக் கலை மற்றெல்லாவற்றையும் விட எவரையும் விரைவில் ஈர்க்கும் தன்மை பெற்றது.

* * *

கலைகளுள் தலைசிறந்தது இலக்கியம். மக்கட்கு வழிகாட்டுவதில் மற்றெல்லாவற்றையும் விட மேம்பட்டது இலக்கியக் கலை. பல்வேறு கலைகளையும் எழுதிக் காட்டுவது இலக்கிய மென்னும் கலை. எம்மொழியில் இலக்கியங்கள் பெருகி நிற்கின்றனவோ அம்மொழி சிறப்புடை மொழியாகக் கொள்ளப்படுகின்றது. அம்முறையில் நம் தண்டமிழ் மொழி சிறப்புடை ஓர் மொழியாகும். தமிழில் இலக்கியங்கள் பெருக்கம் பெற்றிருக்கின்றன. பண்டிருந்தோர் வரலாறுகளையும் நீர்மைகளையும் பழக்க வழக்கங்களையும் கருத்துக்களையும் அறிதற்கு ஏற்ற கருவி இலக்கியங்களே. இலக்கியங்கள் இன்றேல் அவற்றைக் காண்டல் இல்லை என்பது தேற்றம்.

* * *

இலக்கியக் கலைஞரும் மற்றைக் கலைஞரைப் போலவே, தனது விருப்பத்தை ஓர் காவியமாகக் கூறுகின்றான். உலகத்தார் இன்புறத்தக்க பொருள்களையும் வியக்கத்தக்க பொருள்களையும் வேறு பல பொருள்களையும் திரட்டி இலக்கியக் கலைஞன், தன் சொல்லால் அமைக்கின்றான்; உலகம் ஒழுகவேண்டிய முறைகளைப் பிறர் வாயிலாகத் தன் சொல்லில் அமைத்துக் காட்டுகின்றான்; தன் கருத்தை அந்நூலினுள் ஆங்காங்குப் பதியவைக்கின்றான்; அழகொழுகுஞ் சொற்களால் அவற்றை ஆக்குகின்றான்; தேன்பிலிற்றும் தொடைகள் கொண்ட பாக்களால் தன் கருத்துக்களைச் செவ்வைப்படுத்துகின்றான். அறிஞர் உள்ளத்தை இன்பக்கடலிலாட்டிப் பெரிதும் மகிழ்விப்பது இலக்கியக்கலை.

* * *

"இம்பர் நாட்டிற் செல்வமெலாம் எய்தியரசாண்டிருந்தாலும், உம்பர்நாட்டிற் கற்பகக்கா ஒங்கு நீழலிருந்தாலும், செம்பொன் மேருவனையபுயத்திறற் சேர் இராமன் திருக்கதையிற், கம்பநாட்டன் கவிதையிற் போற் கற்றோர்க்கிதயம் களியாதே" என்று நிலைசிறந்த இலக்கியங்களுள் ஒன்றாகிய கம்பராமாயணத்தைப் பற்றி ஒரு புலவர் கூறியாங்கு, இலக்கியங்கள் கற்றோர்க்கு அத்துணைப் பேரின்பம் தருவனவாகும்.

* * *

இத்துணைச் சிறப்பு வாய்ந்த கலைகளைக் கண்ணெனப் போற்றி வளர்த்தல் மக்கள் கடன். கலைகளுள் குறைபாடு இருக்கலாம். அது யாண்டுமிருத்தல் இயல்பு. ஆனால் அதன் பொருட்டுக் கலைகளையே வெறுத்தல் ஆகாது. ஓர் ஓவியக் கலைஞன் ஓர் உருவத்திற்குக் கையைச் சிறிது நீளமாக வைத்திருக்கலாம். அப்படியானால் அதனைச் செவ்வைப்படுத்தலாம்; அன்றி—அது இயலாது போமேல் அக்குறை இல்லா வேறொரு சித்திரம் அமைத்தல் வேண்டும். அதன் பொருட்டு ஓவியமே உலகில் இல்லாது தொலைத்துவிட வேண்டுமென்று உரைத்தல் மதியீனம். ஓர் இசைக் கலைஞன் இசைமுறை பிறழப் பாடினுனல் அத

(அடுத்த பக்கம் பார்க்க.)

## தடைமீறிய விவாகம்.

### ஹைக்கோர்ட் நடவடிக்கை.

(ஜஸ்டிஸ் மாதவன் நாயர், ஜஸ்டிஸ் ஜாக்ஸன் முன்பாக.)

ராமநாதபுரம் ஜில்லா காரைக்குடியைச் சேர்ந்த ஒ சிறுவயல் ஆர். எம்.எஸ். பி.எஸ். சோமசுந்தரம் செட்டியார் என்ற கருப்பன் செட்டியார் சென்ற அக்டோபர் மாதம் ௩௦-ந்தேதி யன்று தம் மனைவியாகிய மெய்யம்மை யாச்சியை விலக்கிவிட்டு கோனாப்பட்டில் வேறு பெண்ணை விவாகஞ்செய்து கொண்டு விட்டதாக, ஒரு வழக்கு செப்டம்பர்மீ ௨௦-உ விசாரணைக்கு வந்தது. இதன் விவரத்தை "சுதேசமித்திர"னின்றும் எடுத்துக்கீழேதருகிறோம்:—

இந்தவிவாகம்நடைபெறக்கூடாமல்தடையுத்தரவுபிறப்பிக்குமாறு சீமதி மெய்யம்மை யாச்சி ராமனாதபுரம் சப் ஜட்ஜி முன்பாகப் பிராதுகொடுத்திருந்தார்.சப்ஜட்ஜிதடையுத்தரவு பிறப்பிக்க மறுத்துவிட்டார். விவாகம் அக்டோபர் ௩௨ நடைபெற திரு சோமசுந்தரம் செட்டியார் ஏற்பாடு செய்திருந்ததாகக் கேள்வியுற்று, அவர் மனைவி ஹைகோர்ட்டில் அக்டோபர் ௩௦-உ அப்பீல் செய்து கொண்டார். ஜஸ்டிஸ் ரீலி தற்காலிகத் தடையுத்தரவு பிறப்பிக்க மறுத்துவிட்டார். அதன் பேரில் லெட்டர்ஸ் பேடண்டு அப்பீல் கொடுக்கப்பட்டது. கனம் ஜட்ஜிகள் அப்பீல் மனுதார் கோரியவாறு தடையுத்தரவு பிறப்பித்தார்கள். இந்த உத்தரவு ராமனாதபுரம் சப்ஜட்ஜினால் சோமசுந்தரம் செட்டியாருக்குப்புதுக்கோட்டைப்போலீஸ் மூலம் சதாரா செய்யப்பட்டது. மனுதாரும் இந்த உத்தரவைப்பெற்றுக் கோனாபட்டுக்குச் சென்று விவாகம் தடைப்படுத்தப் பட்டிருப்பதாக அறிவித்தாராம். திரு. சோமசுந்தரம் செட்டியார் இவற்றைப் பெற்றுக்கொள்ளாமல் அக்டோபர் ௩௧-உ காலை ௪-௩௦-மணிக்குள் தாலிகட்டி விவாகம் செய்துகொண்டு விட்டாராம். இவ்விதம் செய்தது கோர்ட்டு உத்தரவை அவமதித்ததாகும் என்று மெய்யம்மை யாச்சி சார்பாக ஹைக்கோர்ட்டில் அவமதிப்பு நடவடிக்கை மனுக்கொடுக்கப்பட்டது. திவான் பகதூர் டி. ரங்காச்சாரியார் மனுதாருக்காக ஆஜராகி, திரு. சோமசுந்தரம் செட்டியார் வேண்டுமென்றே கோர்ட்டு உத்தரவை அவமதித்து விவாகம் செய்திருப்பதைக் கனம் ஜட்ஜிகள் கவனித்து அவருக்குக் கடுமையான சிட்சை விதிக்கவேண்டுமென்றார்.

அட்வகேட் ஜனரல் திரு. செட்டியாருக்காக ஆஜராகித் தம் கட்சிக்காருக்குத் தடையுத்தரவு பிறப்பிக்கப் பட்டிருப்பதே தெரியாது என்றும் அவர் செய்கைக்காகத் தாம் அவர் சார்பாக மன்னிப்புக் கேட்பதாகவும் சொன்னார்.

திவான்பகதூர் ரங்காச்சாரியார், அட்வகேட் ஜனரல் மன்னிப்புக் கேட்பதில் பிரயோஜனமில்லையென்றும், தப்பிதம் செய்த செட்டியார் தாம் செய்த குற்றம் எவ்வளவு பெரிதென்று மனமார உணர்ந்து இனி அவ்விதம் செய்யமாட்டேன் என்று கோர்ட்டு முன்பு ஆஜராகி வருத்தம் தெரிவிக்குமாறு செய்யவேண்டுமென்றும், கனம் ஜட்ஜிகள் அவ்விதம் செய்யாவிடில் நாளைக்கு அவர் தம் வக்கீல் மன்னிப்புக் கேட்டதற்குத் தாம் ஜவாபில்லையென்றும் மறுத்துவிடுவார் என்றும் சொன்னார்.

ஜஸ்டிஸ் ஜாக்ஸன்:-விளக்கை ஏற்றிக் கையில் வைத்துக்கொண்டு செய்தது பிசகென்று பிரமாணம் செய்யுமாறு அவருக்கு உத்தரவிடுவோமா? (சிரிப்பு).

ஜஸ்டிஸ் மாதவன் நாயர்:-அவ்விதமாயின் சோமசுந்தரம் செட்டியாரிடமிருந்து எழுத்துமூலம் மன்னிப்புக் கோரிக் கோர்ட்டு முன் ஆஜர்ப்படுத்துமாறு செய்வோம்.

இருகட்சி வக்கீல்களும் இதற்கு ஒப்புக் கொண்டார்கள். எதிர் மனுதார் மன்னிப்புத்தாக்கல்செய்ய ௬௦-நாள் சாவகாசமளித்து இவ்வழக்கு சம்பந்தமாக அப்பால் முடிவு கூறுவதாகக் கனம் ஜட்ஜிகள் சொல்லியிருக்கிறார்கள்.

திரு. டி. ரங்காச்சாரியார் திரு. எஸ் பார்த்தசாரதி அய்யங்கார் திரு. வி. கே. திருவேங்கடாச்சாரியார் மனுதார் சீமதி மெய்யம்மையாச்சிக்காகவும் அட்வகேட் ஜனரல் திரு. அல்லாடி கிருஷ்ணசாமி அய்யரும் திரு. பதஞ்சலி சாஸ்திரியாரும் எதிர்மனுதார் சோமசுந்தரம் செட்டியாருக்காகவும் ஆஜரானார்கள்.

---

(முன்பக்கத் தொடர்ச்சி.)

னைத் திருத்த முயல்தல் அறிவுடைமையன்றி, அதனால் இசைக்கலையையேவெறுத்தல் முறையாகுமா?

* * *

ஓர் இலக்கியக் கலைஞன் தவறான கருத்தைக் கூறுவானாயின், அக்கருத்தை ஒழுங்கு முறையில் மறுக்கலாமன்றி, அதுகொண்டு அவன் ஆக்கிய இலக்கியம் அனைத்தையும் வெறுப்பதும், அதனால் இலக்கியக் கலையை புறக்கணிப்பதும் அறிவுடைச் செயலன்று. அவ்வாறுபார்த்தால் எல்லோரும் ஏற்கத்தக்க வகையில் எல்லாப் பகுதியும் அமைந்த இலக்கியம் ஒன்று இவ்வுலகில் இருக்கமாட்டாது. கலைகளை—சிறப்பாக இலக்கியக் கலையை அழிக்குங் கொள்கையை அடியோடு விட்டொழித்தல் வேண்டும். கலைகளை அழித்தல் மனித வளர்ச்சியை அழிப்பதாகும். பழைய கலைகள் அனைத்தும் தங்கூற்றுக்கு முரண்பாடு என்று யாருக்கும் தோன்றுமானால், அவர் தங்கூற்றை விளக்கும் புதிய கலைகளை உண்டாக்கும் வேலையில் இறங்கலாம். பழயதைவிட எல்லாவற்றினும் இப்புதியது உயர்ந்தது என மக்களாற் கருதப்படும் நிலை வருமானால் புதியது வன்மைபெற்றுவிடுகிறது. ஒன்றையும் ஆக்குதற்கு அறியாதவர் அழிவு வேலையில் இறங்குதல் ஆகாது. நாடு நல்வாழ்வு வாழ வேண்டுமானால் வெள்ளத்தின் பெருக்கைப் போற் கலைப்பெருக்கு மேவுதல் வேண்டும்.

---



## ஜில்லா போர்டு.

ராமனாதபுரம்ஜில்லாபோர்டின்கூட்டமொன்று ௧௪-ந்தேதிநடந்தது.ஒவ்வொருபஞ்சாயத்தும்ஏற்பட்டவுடனேமேற்படி பஞ்சாயத்து எல்லைக்குள் ௧௯௨௦-ம் வருஷத்து லோகல்போர்டு சட்டம் ௭௭-வது பிரிவின்கீழ் வரி விதிக்க அந்தப் பஞ்சாயத்திற்கு அதிகாரம் கொடுக்கவேண்டுமென்றும் அந்த அதிகாரம் ஏற்கனவே தாலூகா போர்டுக்குக் கொடுக்கப்பட்டிருந்தால் அதை ரத்து செய்து கிராமப் பஞ்சாயத்திற்கு மாற்ற வேண்டுமென்றும்வந்தசாத்தூர் தாலூகாப் பஞ்சாயத்து யூனியனின் சிரூபம் ஆலோசிக்கப்பட்டதில், இதைத் தீர ஆலோசித்து ரிப்போர்ட்டு செய்ய திருவாளர்கள் சுப்பையா பிள்ளை, பொன்னுசாமிப் பிள்ளை,உக்கிரபாண்டியம் பிள்ளை, ராமச்சந்திரம் பிள்ளை, காசிவிசுவநாதன் செட்டியார், கோபால நாயக்கர், ராவ்சாகிப் ராஜம் நாயுடு, போர்டு தலைவர் உள்பட ஓர் கமிட்டி நியமிக்கப்பட்டது.

### தண்ணீர் வசதி விதிகள்.

கிணறுகள் மற்றும் குடிதண்ணீர் வசதிகளான குளங்களில் மீன்பிடித்தல் முதலிய அசுத்தங்கள் செய்யாமலிருக்கச் சில விதிகள் ஏற்படுத்தப் பட்டன.

### புத்தகசாலை.

ஒவ்வொரு தாலூகாபோர்டு எல்லைக்குள்ளும் குறைந்தது முக்கியமான ஒரு யூனியனில் ஒரு புத்தகசாலை ஏற்படுத்தவேண்டுமென்றும் அதற்கு ௧௦௦௦ ரூபாய்க்கு அதிகப்படாமல் போர்டார் செலவு செய்யவேண்டுமென்றும் ஏற்கனவே நிறைவேறிய ஜில்லாபோர்டுத் தீர்மான விஷயமாய்ச் சற்று வாதமேற்பட்டது. இறுதியில் மேற்படி புத்தகசாலை தற்காலீகமாய் போர்டாபீசிலேயே வைக்கப்பட வேண்டுமென்று தீர்மானித்து, அவை எவ்வாறு ஸ்தாபிக்கப்படவேண்டுமென்பதை ஆலோசிக்க திருவாளர்கள் டி. ஸி. சீனிவாசய்யங்கார், டாக்டர் போத்தன், ராவ்சாகிப் மாணிக்கவாசகன் பிள்ளை முதலியோர்களடங்கிய ஓர் கமிட்டி நியமிக்கப்பட்டது.

### வில்லிபுத்தூர் பாக்கி.

ஸ்ரீ வில்லிபுத்தூர் முனிசிபாலிடியார் இந்த ஜில்லாபோர்டாருக்குக் கொடுக்க வேண்டிய சுங்க வரித்தொகை பாக்கி ரூபாய் ௬௦௦௩௪-ஐயும் மூன்று வாயிதாவில் போர்டார் வாங்கிக்கொள்வதாய் ஒப்புக்கொண்டனர்.

### சுகாதார போர்டுக்கு.

திரு. காசிவிசுவநாதன் செட்டியாரவர்கள் ஜில்லா போர்டின் பிரதிநிதியாய் சுகாதார போர்டுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

### இரு பாடசாலைகள்.

சிவகங்கைத் தாலூகாவைச் சேர்ந்த சிங்கம் புணரியிலும் கல்லல் என்றவிடத்திலும் போர்டு ஆண் பாடசாலைகள் கட்டுவதற்கு முறையே ௪௮௬௦, ரூபாயும் ௩௩௫௦ ரூபாயும் அனுமதிக்கப்பட்டன.

### ரஸ்தாவும் பாலமும்.

போர்டு எல்லைக்குட்பட்ட ரஸ்தாக்களைச் செப்பனிடவும் புதிய ரஸ்தாக்கள் போடுவதற்கும் சுமார் ரூபாய் ௪௫,௫௦௭-ம் பரமக்குடி அருகில் வைகையாற்றில் கல்பாலம் கட்டுவதற்கு ரூபாய் ௮௩,௦௦௦-ம் எஸ்டிமேட்டுகள் சாங்கிஷன் செய்யப்பட்டுக் கூட்டம் கலைந்தது என்று "சுதேசமித்திரன்" நிருபர் எழுதுகிறார்.

## எப்ரஹாம் லிங்கன்.

காரைக்குடி ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரேஸ்வர வித்தியாசாலை மாணவர்கழகங்களின் நான்காவது கூட்டம் சென்ற ௧௪—௯—௨௯-உ சனிக்கிழமை ௪-௩௦ மணிக்கு நடை பெற்றது. அவ்வமயம் திருவாளர் சிதம்பரம்பிள்ளை, பி. ஏ., தலைமை வகித்தார். 'எப்ரஹாம் லிங்கன்' என்றபொருள் பற்றி, முறையே. திரு ஸ்ரீனிவாசன், திரு.முத்துராமன் என்ற பிரவேச பரீட்சை வகுப்பு மாணவர்களும், பிறகு தலைமையாசிரியர் அவர்களும், சரித்திர போதகாசிரியரும் பேசினர். ஓர் பிரவேசப் பரீட்சைமாணவரான திரு. எஸ்.ராமமூர்த்தி அவற்றின் சாரத்தைத் திரட்டிப் பின் வருமாறு எழுதி யனுப்பியுள்ளார்:—

லிங்கன், அமெரிக்காவிலுள்ள கென்டகி என்ற பிரதேசத்தில், ௧௮௦௯-வது பிப்ரவரி-மீ ௧௨-உ அவதரித்தார். அவரது தந்தை ஓர் மரம் வெட்டி; அவர்களது வீடோ, மரத்தாலாகிய ஓர் சிறிய குடிசை. லிங்கன் இளமைப் பருவத்திலேயே தாமாகக் கல்விபயின்றார். அந்நாட்களில் இந்நாளைப் போல் புத்தகங்கள் குறைந்தவிலைக்குக்கிடைப்பதரிது. கற்பலகைகளும் கிடையா. போதாக்குறைக்கு லிங்கன் குடும்பத்தாரும் மிக்க வறுமையால் பீடிக்கப்பட்டனர். லிங்கன் தமது வாலிபத்திலேயேபார்த்த புத்தகங்கள், டேனியல் டீபோ எழுதிய ராபின்ஸன் குரூஸோ, ஜியார்ஜ்வாஷிங்டனுடைய ஜீவிய சரித்திரம், யுனைடட் ஸ்டேட்டுகளின் சரித்திரம், ஜான் பன்யன் எழுதிய பில்கிரிம்ஸ் ப்ரோக்ரஸ் முதலிய சிலவேயாகும். வீட்டின் சுவர்களே அவருடைய கற்பலகைகள்; கரித்துண்டுகளே அவரது எழுதுகோல்கள்.

லிங்கன் தமது இளமைப்பருவத்தில் சுமார் ஆறடி உயரமும், அதற்கேற்றபருமனும் உள்ளவராகத் தோன்றினர். அவர் காலைப் போசனம் முடிந்தபிறகு, ஒரு கையில் ராபின்ஸன் குருசோவும், மற்றோர் கையில் ஓர்கோடாரியும் எடுத்துக் கொண்டு காட்டிற்குச் செல்வார். அங்கு காலை முதல் மாலை வரையில் வியர்வை நீர் நிலத்தில் விழ, மரங்களை வெட்டுவார். களைத்த நேரங்களில் படிப்பார். மாலையில், தமது இரவுப் போசனத்திற்காக வேட்டையாடிவிட்டு வீட்டிற்குத் திரும்புவார்.

லிங்கன் ஓர் கடை வைத்திருந்தார். அங்கு வியாபாரம் செய்வதற்குப்பதிலாக, அத்தேசத்து அரசியல் அமைப்பைப்பற்றிக் கூறும் புத்தகத்தையே படிப்பார். அவர்கடையில் சாமான்கள் வாங்க வருபவர்களும், தம்முடைய வேலைகளைக் கவனியாமல் அங்கேயே வெகு நேரம் வரையில் உட்கார்ந்து, அவர் படிப்பதைக் கவனமாய்க் கேட்பார்கள். கொஞ்ச காலம் வரையில் முறையே யுத்த வீரராகவும், தபால்காரராகவும், சர்வேயராகவும் இருந்த பின்னர், இறுதியில் வக்கீல் தொழிலிலிறங்கினர். அவருடைய பேச்சுக்களைக் கேட்பதற்காக, நீதிஸ்தலத்தில் ஜனங்கள் திரளாகக் கூடுவது வழக்கம்.

லிங்கனுக்கு வயதுஇருபத்தொன்று ஆயிற்று. அவர், தாம் புத்தகத்தில் படித்த வண்ணம் அரசாட்சி நடக்கின்றதா அல்லது மாறுபட்டிருக்கின்றதா என்பதைப்பார்ப்பதற்காகப் புறப்பட்டார். முதல் முதலில் நியூ ஆர்லியன்ஸ் நகரை யடைந்தார். அங்கு ஓர் அடிமைச் சந்தை ஒன்றிருப்பதைக் கண்டு இரத்தக் கண்ணீர் சிந்தினர். நீக்ரோ அடிமைகள், குதிரைகள் போன்று விற்கப்படுவதைக் கண்டு சினந்தார். அச்சமயத்தில் அவர் "எனக்கு ஏற்ற தருணம் வாய்த்தால் அடிமைத் தொழிலை நான் அடியோடு துலைத்துவிடுவேன்" என்று உறுதி செய்துகொண்டார். "ஓர் மரம் வெட்டியாவது, அவனுக்குத் தருணம் வாய்ப்பதாவது," என்றிவர் நினைக்கலாம். ஆனால் அதற்கு மாறாக அவர், தாமிருந்த ஸ்டேட்டு பரிபாலன சபைக்கு அங்கத்தினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவர் அதே ஆண்டில், வாஷிங்டன் காங்கிரஸிற்கு அனுப்பப்பட்டார். அந்தக் காங்கிரஸில் ஏப்ரஹாம் லிங்கனுக்கும், டக்லஸ் என்பவருக்கும் வாதம் நடந்தது. லிங்கனுடைய கொள்கையாவது:— "சுயேச்சையானது அணுவளவும் பிசகாதது. நீக்ரோவும் மனிதன்தானே. அந்த ஹோதாவில் அவனுக்கும் சுயேச்சை கொடுக்க வேண்டியிருக்க, அவனை இழிவாக நினைக்கலாமா? வெள்ளையன் தன்னை மாத்திரம் ஆண்டுகொண்டால்தான் அதற்குச் சுயேச்சை யென்ற பெயர். ஆனால், தன்னையும் ஆண்டுகொண்டு, மற்றொருவனுடைய விருப்பத்திற்கு மாறாக, அவனையும் ஆண்டால் அது கொடுங்கோன்மையாகும்.டக்லஸ் என்பவருடைய கொள்கை யாதெனில், அடிமைத் தொழிலை எந்தெந்த ஸ்டேட்டுகள் விரும்புகின்றனவோ அவைகள் அதை வைத்துக்கொள்ளட்டும். விரும்பாத ஸ்டேட்டுகள் அடிமைத் தொழிலை விட்டுவிடட்டும்" என்பதேயாகும். இவ்விதம் இருவரும் ஊர் ஊராய்ச் சென்று பிரசங்கங்கள் செய்யவே, லிங்கனுடைய மொழிகள் வடக்கேயுள்ள சமஸ்தான ஜனங்களின் மனதையும், டக்ளஸின் மொழிகள் தெற்கித்தியாரின் மனதையும் கவர்ந்தன. லிங்கன் மிக்க தைரியத்துடன், புளுமிங்டன்என்றஇடத்தில் ஓர் அரிய பிரசங்கம்செய்தார். அவரதுவீரமொழிகளைக் கேட்ட பத்திரிகை நிருபர்களின் எழுதுகோல்கள்கூட கீழே நழுவி விழுந்துவிட்டன என்றால் அதன் பெருமையைக் கூறவும் வேண்டுமா?

அப் பேச்சின் இறுதியில் அவர் பகர்ந்த வீரமொழிகளாவன:—"சுயராஜ்யம் கிடைக்கும் தினத்தை நாம் எதிர்பார்க்கவேண்டும். இப்பொழுது நம் நாடு பெயரில்தான் சுயேச்சை நாடாகவிருக்கின்றது. ஆனால், உண்மையில் அது அவ்விதம் இல்லை. ஆனால் நாம் சமஸ்தான ஒற்றுமைக்கு மாறாகச் செல்லாமல் ஒற்றுமைக் கொடியை நிலைநாட்டவே விரும்புவோம்." மேலும் அவர் கெட்டிஸ்பர்க் என்றவிடத்தில் கூறியதாவது:— "நம் முன்னோர்கள் தம் நாடு சுயேச்சை யடைவதைப் பார்க்காமலேயே உயிர்விட்டனர். ஆனால் அவர்கள் தம் உயிரை வீணில் விடவில்லை. சுதந்திரப் போராட்டத்திலேயே தம்முடைய உயிரைவிட்டனர். ஜனங்களுக்காக ஏற்படுத்தப்பட்டும், ஜனங்களால் ஏற்படுத்தப்பட்டுமுள்ளஇந்தஅரசாட்சியானது ஒருநாளும் அழிவடையாது."

இவ்விதமான உணர்ச்சிக்கெல்லாம் காரணமாயிருந்த லிங்கன் ௧௮௬௨-வது நவம்பர்-மீ'ல் யுனைடெட் ஸ்டேட்டுகளுக்குத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். ௧௮௬௫-ம் ஆண்டில் ஏப்ரல்-மீ'ல் ஓர் பெரிய போராட்டத்தின் முடிவில் அடிமைத் தொழிலை ஒழித்தார். நாடெங்கும் லிங்கனைப் போற்றுவதற்காகக் கூட்டங்கள் கூடின. ஆயினும் அவர் ஏப்பிரல்-மீ ௧௫-உ ஓர் நாடகம் பார்ப்பதற்காகச் சென்றவிடத்தில் ஓர் தெற்கித்தியானால் கொல்லப்பட்டார்.

நம் நாடும் இப்பொழுது சுதந்திரத்தை யெதிர்பார்க்கின்றது. ஆகையால் ஒவ்வொரு இந்தியரும் லிங்கனைப் போன்று தம் நாட்டிற்காகப் பாடுபட வேண்டியது அவசியம்.

## முனிசிபல் தேர்தல்.

**வேலைகள் மும்முரமாக நடக்கின்றன.**

காரைக்குடி பழ. நாராயணன் செட்டியார் எழுதுகிறார்:—

நமது காரைக்குடி முனிசிபல் கௌன்சிலுக்கு எலெக்ஷன் நடப்பதற்கான முயற்சிகள் வெகு மும்முரமாக நடக்கின்றன. இறுதியான ஓட்டர் ஜாபிதாக்கள் தயாரிக்கப்பட்டு அச்சாகி வருகின்றன. கௌன்சில் பதவிக்கு நிற்க விரும்புகிறவரும் இப்பொழுது முதலே ஓட்டர்களிடம் தங்களுக்காதரவுசெய்யும்படி விடுவிடாகச் சொல்லிவருகிறார்கள். அன்பர்கள் நகரத்திற்கு நன்மைசெய்யச் சவகாசமும் ஊக்கமும் உடைய அபேட்சகர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டுகிறேன். நமது முனிசிபாலிட்டி இந்த மாகாணத்திலேயே மிகவும் செல்வம் படைத்ததொன்று என்பதை நேயர்கள் அறிவார்கள்.

முனிசிபாலிட்டி அமைந்த முதல் வருடத்தில் ஆரம்ப இருப்பு ரூபாய் ௩௨௭௭௪. மொத்த வரவு ரூபாய் ௧௨௨௭௯௧. வருஷக் கடைசி யிருப்பு ரூபாய் ௩௫௫௮. எனவே முதல் வருஷத்திலேயே லட்சத்திற்கு மேல் வரவு செலவு நடந்திருக்கிறது. வேறு பல முனிசிபாலிடிகளில் பிரிடமிருந்தும் கவர்மெண்டாரிடமிருந்தும்கூடக் கடன் வாங்கியோ அல்லது நன்கொடையாகவோ பணம் பெற்று நகர அபிவிருத்தி செய்வது வழக்கமாயிருந்து வருகிறது. நமது முனிசிபாலிட்டிக்கு முதல் வருஷத்திலேயே வந்திருக்கும் வருவாயை நோக்க, பண முடை யென்பது கொஞ்சமுமின்றாமலே நமது காரைமாநகரை செம்ம சுகாதாரமாகவும் அழகும் வசதியும் நிறைந்ததாகவும் செய்யலாம். ஆதலால் வரப்போகும் முனிசிபல் சபை ஜனங்களிடம் செல்வாக்கு நிறைந்து நகரத்திற்கு நல்ல வேலைகளை இயற்றக்கூடியதாக அமையும்படி அன்பர்கள் யாவரும் இப்பொழுதிருந்தே பலமாக முயற்சி செய்துவர வேண்டுமென்று வேண்டிக்கொள்ளுகிறேன்.



ஊக்கமது கைவிடேல்

## "சான்டோ"க்களின் புரட்டு.

(சான்டோ லெ. சோமசுந்தரனார்.)

திருப்பத்தூர் வாசியான எ. ஆர். முத்துவேல் பிள்ளை என்பாரைப் பல்லாண்டுகளாக நான் அறிவேன். அவர் சிறிய சர்க்கஸ் கம்பெனிகளில் அமர்ந்து தமது திறமைக்குத்தக்க தொழில்கள் செய்துவருவதும் எனக்குத் தெரியும். அவர் தற்காலம் தமது உடல் வலித் தொழில்களைக் காண்பிக்கும் பொருட்டு மலாய்நாடு சென்றிருக்கிறாரென இவ்வாரத்தில் எனக்குக்கிடைத்த கடிதத்தால் அறிகின்றேன். அக்கடிதம் (Johore State) ஜொகோர் ஸ்டேட்டைச்சார்ந்த (Tangah) 'தங்கா' என்னும் ஊரிலிருந்து எனக்கனுப்பப் பட்டிருக்கிறது. அக்கடிதத்துடன் முத்துவேல் பிள்ளையினுடைய பராக்கிரமச் செயல்பற்றிய விளம்பரம் ஒன்றும், அன்னாரின் உடல்வலித்தொழில்களை ஆதரிக்க வேண்டுமென்ற முறையில் தங்கா-'இந்திய பாலியசங்கத்தார்' ஐவர் கையெழுத்திட்ட துண்டுப் பிரசுரம் ஒன்றும் வரப்பெற்றேன். ஆனால், கடிதம்-பெயர் குறிக்கப்படாத மொட்டை விண்ணப்பம். எனினும், அச்சிட்ட விளம்பரம் உண்மை என்ற ஆதாரத்தை வைத்து அதற்குப் பதில் தருவது கடமை யென்றெண்ணுகிறேன். கடிதம் வருமாறு:—

"ஐயா! சாண்டோ, சோம. அவர்களுக்கு.

உபய க்ஷேமம்.

தாங்கள் 'ஊழியன்' பத்திரிகையில் சாண்டோக்களின் திறமைகளை வெளியிட்டிருந்தீர்கள். ஷை பத்திரிகையில் அ000-ம் பவுண்டுக் கனமுள்ள கல்துண்டை மார்பின்மேல் ஏற்றுவதாக அறிந்தேன். இவ்விடத்தில் திருப்பத்தூர் சாண்டோ, எ. ஆர். முத்துவேல்பிள்ளை அவர்கள் வந்து, கரு000-ம் பவுண்டுக் கனமுள்ள கல்துண்டைத் தூக்கிக்கொண்டு, முழுமனதுடன் பேசிக்கொண்டும் இருந்தார். இவர் இவ்விடம் செய்த தொழில்களெல்லாம் நோட்டீஸ் மூலம் தெரிந்து கொள்ளலாம். உங்கள் ஊருக்குப் பக்கமுள்ள திறமைவாய்ந்த சாண்டோவினுடைய அப்பியாசங்களைப் பத்திரிகைமூலம் தெரிவிக்கவில்லை. தற்போது இவர் இவ்விடம்வந்த தாக்கல் தெரிந்தோம். இவருடைய தேகப்பயிற்சியை நேரிலும் தெரிந்தோம். இவருடைய விஷயம் 'ஊழியன்' பத்திரிகையில் ஒருபோதும் தெரியவில்லை. உங்கள் மூலம் இன்னாரின் விஷயங்களைப் பத்திரிகை மூலம் தெரிவிக்கவும்."

இக்கடிதத்துடன் வந்த விளம்பரத்திலுள்ள பிற விஷயங்களைப்பற்றி இப்போது கவனிக்கத் தேவையில்லை. கடிதத்திலும்விளம்பரத்திலும் பிரஸ்தாபித்துள்ள கரு000-ம் பவுண்டுக்கனமுள்ள கல்லை முத்துவேல் அவர்கள் மார்பில் தாங்குவதாகக் குறிக்கப்பட்டிருக்கிறது. இது வெறும் புரட்டென்றே நான் நம்புகிறேன். உண்மையில் அவர் கரு000-ம் பவுண்டுக் கனத்தை மார்பில் ஏற்றியிருக்கும்பட்சத்தில், மாணவாயிலாக மறு உலகின் மர்மங்களை நீண்ட நாட்களுக்கு முன்னரே கண்டு கொண்டிருப்பார். எவ்வளவு பெரிய பலசாலியும் இதுவரை கரு000-ம் பவுண்டுக்கனமுள்ள பாரத்தைத் தாங்கியதாய்ச் சரித்திர மூலம் இல்லை. இத்தகைய பொய்யான விளம்பரம் செய்வதில் நம் நாட்டில் பலர் முனைந்து நிற்கின்றனர். பொய் விளம்பரங்களைப் பொது ஜனங்கள் ஆதரித்தல்கூடாது. இக்கல்லைத் தகுதிவாய்ந்த "இந்திய பாலிய சங்கத்தார்" நிறுத்துப் பார்த்தனரா? பொய்யான விளம்பரங்களை யாரேனும் வெளியிட்டால் பொறுப்பு வாய்ந்தோர் கண்டித்தல் வேண்டும்.

சென்ற மாதத்தில் ஒரு புரோபெஸர் என்னைப் பார்க்க வந்தார். தாம் செய்யும் அரிய பெரிய விஷயங்களைப் பற்றிய ஒரு விளம்பரத்தை என்னிடம் கொடுத்தார். அதில் பல விஷயங்கள் குறிக்கப்பட்டிருந்தபோதிலும், ரு000 பவுண்டுக் கனமுள்ள இருப்புக் குண்டை உயர எறிந்து தாவித் தாவிப் பிடித்தலும், மூன்று சீட்டுக் கூட்டங்களை ஒரே முறையில் கிழித்தலும் முக்கியமானவை. இவ்விரண்டு விஷயங்களையும் நான் கண்டு போராச்சரியம் அடைந்தேன். இத்தகைய பராக்கிரம சாலியைக் காணக்கிடைத்தது பாக்கியம் என்றே எண்ணினேன். பரீட்சிக்க வேண்டி மூன்று சீட்டுக் கூட்டங்களையும் ரு00-பவுண்டு பார்பெல்லையும் கொண்டுவரச் செய்து, விளம்பரத்தில் கண்டபடி செய்துகாட்ட வேண்டினேன். 'பொய்யாய்—பழங்கதையாய்—கனவாய் மெல்லப் போனதுவே.' ஒரு கூட்டம் சீட்டுக்கூடக் கிழிக்க முடியாமலும், இரு கரங்களாலும் கஉ0-பவுண்டுக் குண்டைத் தலைக்கு மேல் உயர்த்த முடியாமலும் விழித்தார். இம்மாதிரிச் சாண்டோக்கள் நமது நாட்டில் அனந்தமுண்டு.

நான் "சுமத்ரா"வில் இருந்தபோது சர்க்கஸ் படையுடன் ஒரு புரொபெஸர் வந்தார். அவரை நாம் போய்ப் பார்த்தோம். அல்லாமல் அவருடைய உடல்வலித் தொழில்களையும் கண்டு களித்தோம். புரொபெஸர் இராமமூர்த்திக்கு ஒரு சிறிதும் அவர் இளைத்தவரல்லர். அவரை விருந்துக்கழைத்திருந்தோம். விருந்து முடிந்து யாவரும் பல விஷயங்களைப்பற்றிச் சம்பாஷித்தோம். மாலை நேரமானதும் நாங்கள் விளையாடும் இடத்திற்கு அவரை அழைத்துச் சென்றோம். அவருடைய சக்தியை அறியவேண்டி கனம் தூக்கும்படி கேட்டுக்கொண்டோம். கஙஉ0-பவுண்டு கனம் எடுக்கமுடியவில்லை. மற்றொரு நண்பர் எடுத்துக் காட்டினார். அதனைக் கண்டு புரொபெஸர் மிகவும் வெட்கிப்போனார். எங்களிடம் நட்புக் கொண்டார். கனம் தூக்கும் அப்பியாசத்தை நாங்கள் அவருக்குக் கற்றுக் கொடுத்தோம்.

பாரந்தாங்குவதுபோன்ற தொழில்களை இப்போது பலர் செய்து வருகின்றனர். மனித சக்தியிற் குறைவுபட்டவருங்கூடச் செய்கிறார். "இவன் உண்மை மனிதனாய் இருக்கின்றான் என்பதை அறியவேண்டுமானால், நாற்றைம்பது பவுண்டுக். கனமுள்ள பார்பெல்லை எடுத்துத் தலைக்குமேல் நிமிர்த்துகின்றானா எனப்பரிசோதனை செய்' என 'ஆர்தர் ஸாக்ஸன்' என்ற பலவான் கூறுகின்றார். 'தன் உடம்பின் கனத்தைப்போல மற்றொரு பங்கின் கனம் தூக்குபவன் பலசாலி வரும்பில் சேர்க்கத் தகுந்தவன்' என உடற்கூறு சாஸ்திரிகளும்—பலசாலிகளும் ஒருங்கே ஒப்புக்கொண் டிருக்கின்றனர். இவ்வுண்மையை நான் பன்முறை ஊழியனில் எழுதியுள்ளேன். மனித சக்தியில் குறைவுபடாதவருக்கு வெள்ளிப் பதக்கமும், பலசாலியென நிரூபிப்பவர்க்குத் தங்கப் பதக்கமும் பரிசளிப்பதாகக் கூறியுள்ளேன். தமிழ் நாட்டன்பர்களில் இதுவரை இருவரே கஙி0-பவுண்டுக் கனம் தூக்கிப் பரிசு பெற்றனர். மற்றொரு சாண்டோ கனம் தூக்குவதை எம்மிடம் கற்றுக் கொண்டு இப்போது கஙி0-பவுண்டுக்கு மேல் தூக்கும் நிலை அடைந்துள்ளார். வேறு எத்தனையோ பல சாலிகளும் பயில்வான்களும் எம்மிடம் வந்துள்ளார்கள். அவர்களில் ஒருவராவது தாம் மனித சக்தியிற் குறைபடாதவர் என நிரூபிப்பதற்கில்லை. வேண்டுமானால், மலாய்நாட்டன்பர்கள், சாண்டோ முத்துவேல் பிள்ளை அவர்களை, மனிதசக்தியிற் குறைவு படாதவரா—அல்லது பலசாலியா எனப் பரீட்சை செய்து பார்க்கட்டும். கடிதக்காரர் கூறியபடி தாம் திறமை யுள்ளவரென முத்துவேல் பிள்ளை எம்போன்றாரிடம் நிரூபிக்கவில்லை. நிரூபித்திருக்கும் பட்சத்தில் அவரைப்பற்றியும் நான் பத்திரிகையில் எழுதுவேன்.

சென்ற வருடத்தில் இங்கு ஒரு சர்க்கஸ் கம்பெனி வந்திருந்தது. அக்கம்பெனிக்காரர்கள் என்னை விரும்பியழைத்தனர். நான் சென்றிருந்தேன். அப்போது ஒரு கட்டை வண்டி நிறைய ஜனங்களை உட்காரவைத்து, பத்து வயதுள்ள ஒரு பெண் குழந்தையின் மார்பின்மேல் அவ்வண்டிச் சக்கரத்தை உருட்டி இழுத்தார்கள். இரண்டாவதாக, அக் குழந்தை மார்பில் கல்லுரலை வைத்து, அக் கல்லுரலின் குழியில் ஒரு மரத்தை நட்டு, குறுக்கில் பல மரங்களைச் சேர்த்து ஒரு ராட்டினமாகச் செய்து, எட்டுப் பெயர்களை அதிலேற்றிச் சுற்றினார்கள். இதனால் இக் குழந்தை வீரசிங்கம் ஆய்விடுமா!

ஒழுக்கமில்லாத — அறிவில்லாத — பல சாண்டோக்கள் நல்ல நோக்கம் ஒன்றும் இன்றி, பல புரட்டான செய்திகளை வெளியிட்டு, ஜீவனோபாயம் கருதும் வழக்கமுடையவர்களாயிருக்கிறார்கள். பொது ஜனங்கள் பகட்டான விளம்பரங்களைக்கண்டு ஏமாந்து போகிறார்கள். இவ்விதந்தான் எனது அபிப்பிராயத்தை நான் கூற முடியும்.

அமைச்சர் திரு. கு. கும்பலிங்கம் அறிவிப்பது:—

சென்ற வெள்ளிக்கிழமை வெளி வந்த திராவிடனில் 'சிராவயல் காந்தி நிலையத்தில் பிளவு' என்ற தலைப்பில் நிலையத்தைப்பற்றித் தவறுதலாகச் சில செய்திகள் வெளிவந்திருக்கின்றன. ஆதலால் உண்மையை விளக்கவே இதனை எழுதுகின்றேன்.

திராவிடனில் எழுதிய நிருபர் ஐந்து ஆசிரியர்கள் நிலையத்தைவிட்டு வெளியேறிவிட்டதாகக் குறிப்பிடுகின்றார். அது முழுப்பொய். நிலையத்தின் சார்பில் குருகுல முறையில் நடைபெறும் பள்ளிக்கூடத்திற்கு நான் உட்பட ஆசிரியர்கள் மூவரே. மூவரில் இருவர் இப்பொழுது இருக்கின்றோம். வெளிக்கிளம்பியவர் திரு. சீவானந்தர் என்னும் ஒருவர் மட்டுமே. இந்த காந்தி நிலயத்திற்கு உறுப்பினர் பலருண்டு. அவருள் திரு. பெ. பூதலிங்கன் என்பவரும் அவர் சகோதராகிய திரு. பெ. கணபதி என்பாரும் ஆசிரமக் கட்டிடத்தில் சாப்பாடு ஜாகை வைத்துக்கொண்டிருந்தனர். அவ்விருவரும் நிலயப் பள்ளிக்கூடத்திற்கு ஆசிரியர்களல்லர். மருதங்குடி பள்ளிக்கூடத்திலிருந்த திரு. முருகன் என்பவரை அதன் நிர்வாகஸ்தர்கள் நீக்கியதற்கும் காந்தி நிலயத்திற்கும் எவ்வித சம்பந்தமுமில்லை. அவர் காந்தி நிலய அங்கத்தவருமல்லர். மருதங்குடிப் பள்ளிக்கூடம் காந்தி நிலயத்தைச் சேர்ந்ததுமன்று.

திரு. சீவானந்தர் சுயமரியாதை இயக்கத்தில் சேர்ந்ததற்காகவும் ஆதித்திராவிட மகாநாடு கூட்டியதற்காகவும் அவரை விலக்குவதற்கு யான் பலவித

# சிராவயல் காந்தி நிலயம்.

சூழ்ச்சிகள் செய்ததாக 'திராவிட'னில் நிருபர் என்னும் பெயரால் எழுதப்பட்டிருப்பதில் சிறிதும் உண்மையில்லை. இவ்வளவு காலமாக சுயமரியாதை இயக்கத்தில் சேர்ந்த அவர் நிலய ஆசிரியராக வைத்துக்கொண்டிருக்கவேபட்டார். ஆதித்திராவிடர் மகாநாட்டில் எனக்கு எவ்வித வெறுப்புமில்லை. அம்மகாநாட்டை யாதரித்து மகாநாட்டிற்குச் சென்றிருந்தோரில் யானும் ஒருவன். மற்றும் திராவிடன் நிருபர் பிள்ளைகளெல்லாம் நிலயத்தை விட்டுப் போய்க்கொண்டிருப்பதாகவும் நானும் என் மனைவியும் மட்டுமே நிலயத்தில் மீதியிருப்பதாகவும் இது போன்ற வேறு பலவும் எழுதியிருப்பது பெரும் பொய். அந் நிருபர் கூற்று, ஒழுங்குதவறிநடந்துகொண்ட திரு. சீவானந்தர் செய்கையை மறைப்பதற்கு முன்னெச்சரிக்கையாக நடந்துகொண்டதாகவும் மக்களை ஏமாற்றி நிலயத்தின்மீது தவறான கருத்தை உண்டாக்குவதாகவுமிருக்கின்றது. ஆதலால் திரு. சீவானந்தர் விலக்கத்திற்குரிய உண்மையான காரணத்தை வெளியிட யான் கடமைப்பட்டிருக்கிறேன்.

திரு. சீவானந்தர் ஒழுக்கம் தவறி நடந்துகொண்டுவருவதாக ஊரில் பலராலும் என்னிடம் புகார் செய்யப்பட்டது. அதனைத் தீர விசாரித்து நிலயத் தலைவருக்கும் அறிவித்தேன். அதன்பொருட்டு திரு. சீவானந்தர் தலைவரவர்களால் கண்டிக்கப்பட்டார். அந்நிலைமையில் திரு. சீவானந்தர் ஆசிரமத்தில் ஜாகை வைத்துக்கொண்டிருந்த இரண்டு நிலய உறுப்பினர்களைக் கூட்டிக்கொண்டு சில நாட்கள் முன்னர் வெளியேறிவிட்டார். அவர் வெளியேறும்பொழுது நிலயத்திலிருந்த பிள்ளைகளை எல்லாம் கலைத்து நிலயத்தைக் குலைப்பதற்கு வேண்டிய முயற்சிகளை வெளிப்படையாகவும் செய்தார். ஆனால் அவருடைய முயற்சி ஒன்றும் பலிக்கவில்லை. அவருடன் சென்ற நான்கு பிள்ளைகளை மட்டும் அவர்கூட்டிக்கொண்டுபோய்விட்டார். எனவே அந்த திரு. சீவானந்தரும் அவருடன் சென்ற மேற்குறித்த பிள்ளைகளும் தவிர மற்றெல்லோரும் என்றும்போல் நிலயத்திலிருந்து வருகின்றார்கள். நிலயம் எப்பொழுதும் போல நன்றாக நடந்துவருகின்றது. நிலயத்தில் எவ்விதப் பிளவுமில்லை. இதில் மறைவு ஒன்றுமில்லை. யார் வேண்டுமானாலும் நிலயத்தை வந்து பார்வையிடலாம். அங்கு வந்து பார்ப்போர் நானும் என் மனைவியும் மட்டுந்தான் அங்கிருக்கின்றோமா என்பதையும், ஆசிரியர்கள் மாணாக்கர்கள் முதலிய யாவரும் இருந்து பாடம் நடத்துகின்றனரா என்பதையும் காணலாம்.

திரு. சீவானந்தர் நிலயத்தின் இரண்டு அங்கத்தினரையும் கூட்டிக்கொண்டு வெளியேறியது குறித்து இம்மாதம் ௫-ம் நாள் நடந்த நிலயப் பொதுக் கூட்டத்தில் பின்கண்டவாறு தீர்மானிக்கப் பெற்றிருக்கின்றது.

"நிலயத்தின் ஆயுள் உறுப்பினராகிய திரு. ப. சீவானந்தன் அவர்கள் நிலயத்திற்குக் கெட்ட பெயர் வரத்தக்க நிலையில் செய்த செய்கைகளைக் கண்டித்ததற்காக, சென்ற ஆவணித் திங்கள் ௩௦-ம் நாளன்று நிலயத்தின் மற்றொரு ஆயுள்உறுப்பினராகிய திரு. பெ. பூதலிங்கன் அவர்களையும், நிலயத்தின் உறுப்பினர்களில் ஒருவராகிய திரு. பெ. கணபதி அவர்களையும் கூட்டிக்கொண்டு ஒழுங்கற்ற முறையில் நிலயத்தைவிட்டு வெளியேறிவிட்டதை இப் பொதுக்கூட்டம் கண்டிப்பதோடு, தங்கள் வெளியேற்றத்திற்கு கூட்டத்தில் வந்து சமாதானம் சொல்ல வரும்படி, தலைவர், அங்கத்தினர்களாகிய திரு. ரா. பாலசுப்பிரமணியம் அவர்களையும், திரு. தா. நயினார் கோயில் அவர்களையும் அனுப்பிக் கூப்பிட்டதற்கு திரு. சீவானந்தர் முதலியோர் மறுத்து விட்டமையாலும், மேற்குறித்த ஒழுங்குத் தவறு காரணமாகவும், நிலயத்தில் அவ்வவருக்குரிய அங்கத்தினர் பதவியினின்றும் மேற்குறித்த மூவரையும் இப்பொதுக் கூட்டத்தில் நீக்கப்பெற்றது."

இனி திரு. சீவானந்தர் நிலய ஆசிரியருமன்று நிலய உறுப்பினருமல்லர். அவரோடு சேர்ந்து சென்ற மற்றை இருவரும் இனி நிலய உறுப்பினர்களன்று. ஆகவே அம்மூவருக்கும் நிலயத்திற்கும் இனி எவ்விதத் தொடர்புமில்லை.

நிலயம் என்னுடைய ஏதேச்சாதிகாரத்தில் நடைபெறவில்லை. அமைப்புள்ள ஒரு கூட்டத்தின்கீழ் நடைபெறுகின்றது. யான் சரியாக நடந்துகொள்ளவில்லையானால் என்னை நீக்கவும் அவர்கட்கு உரிமையுண்டு. எனவே என்மீது கூறப்படும் பழிகள் வேண்டுமென்றே கூறப்படுவனவாம். நிலயத்திற்குப் பொருள் உதவிசெய்யும் அன்பர் பலர் இவ் உண்மைகளை நன்கு அறிவர். நிலயத்தினின்றும் நீக்கப்பெற்ற சிலர் செய்யும் பொய்ப்பிரசாரத்தைப் பொது மக்கள் யாரும் நம்புதலாகாது என்றும், நிலயத்தின் உண்மை நிலை அறிய விரும்புவோர், அங்கு வந்து பார்த்து, 'திராவிட'னில் நிருபர் கூறியது சரியா என்பதையும் எனது கூற்று சரியாவென்பதையும் தெரிந்துகொள்ள வேண்டுமென்றும் கேட்டுக்கொள்ளுகிறேன். ஒழுங்கற்ற முறையில் அனுவசியமாக நிலயத்தைப்பற்றி எழுதப்படுவனவற்றிற் கெல்லாம் அவசியம் ஏற்பட்டாலன்றி யான் பதிலெழுதிக்கொண்டிருக்கப்போவதில்லை. திரு. சீவானந்தரின் சார்பாகத் 'திராவிட'னில் நிருபர் என்னும் பெயரால் எழுதப்பட்ட விஷயம் உண்மையா என்பதையும் நான் இங்கு எழுதியிருப்பது உண்மையா என்பதையும் தயவு செய்து சிரமத்தைப் பாராமல் நிலய நடைமுறையை நேரில் வந்து பார்த்துத் தெரிந்துகொள்ளும்படி பன்முறை பெரிதும் வேண்டுகின்றேன்.







## அறிவிப்பு.

ராமநாதபுரம் ஜில்லா திருப்பத்தூர் தாலூகா க. புதுவயலில் இருக்கும் அள. கு. சித. சுப. சுப்பிரமணியன் செட்டியார் தெரிவித்துக் கொள்ளுவது:—

ஈந்தட்டா அள. கு. சித. விலாசம் வைத்து அதற்கு பிராஞ்சு ஐந்தப்பூ கடை, செய்லா கு. ராம. சு. ஈந்தட்டா சித. முரு. பள. கூட்டுக் கடைகளும் எங்கள் குடும்பத்துக்கு நடந்து வந்ததில் 1929-ஆு ஜூலை-மீ 2-உ நானும் என்னுடைய சகோதரர்களான குமரப்ப செட்டியாரும் ராமன் செட்டியாரும் செய்துகொண்ட பாக விஸ்தியில் ஷை கடைகள் சம்பந்தமாய் சகல லாப நஷ்டங்களும் ஷை என் சகோதரர்களைப் பொருத்ததென்றும் எனக்கு யாதொரு பின் துயர்ச்சியும் சம்பந்தமுமில்லையென்றும் அள. கு. சித. விலாசத்தை ஒரு கணக்கு வரையிலும், மற்ற விலாசங்களை நெடுகத் துயர்ந்தோ அல்லது மாற்றியோ ஷை என் சகோதரர்கள் நடத்திக்கொள்ளலாமென்றும் தீர்ந்திருக்கிறது. ஆகையால் ஷை என் சகோதரர்கள் ஷை விலாசங்களை வைத்துக் கடைகள் நடத்தினாலும் அது எனக்கு யாதொரு சம்பந்தமில்லையென்றும் அவர்களுடைய நடவடிக்கை என்னைக் கட்டுப்படுத்த மாட்டாதென்றும் இதன் மூலம் தெரிவித்திருக்கிறது.

அள. கு. சித. சுப.
சுப்பிரமணியஞ் செட்டியார்.
5—9—29.



## காந்தி நிலய நண்பர்கட்கு.

சிராவயல் காந்தி நிலயத்தின் அங்கத்தினராகவிருந்த ப. ஜீவானந்தன், பெ. பூதலிங்கம், பெ. கணபதி, ஆ. சுப்பையா நால்வரும் கையெழுத்திட்ட ௨௦-உ யிட்ட ஒரு கடிதம் எனக்குக்கிடைத்திருக்கிறது. மேற்படி கடிதத்தை மேற்குறித்த நால்வருக்கும் பிரதிநிதியாக குமரன் பத்திரிகையின் உதவியாசிரியராகிய ஆ. சுப்பையா என்பவர் எனக்கு அனுப்பியிருக்கின்றார். திரு. கும்பலிங்கம் என்ற ஒருவாது நடத்தை மிக அதிருப்திகரமாயிருப்பதாகவும் அதனால் மேற்குறித்த நால்வரும் தங்கள் பதவிகளைவிட்டு விலகியதாகவும் மேற்படி கடிதம் கூறுகிறது. மேலும், அநேக மாணவர்கள் நிலயத்தைவிட்டுச் சென்றுவிட்டதாகவும் அது கூறுகிறது. நான் அதற்கு வழக்கமாக நன்கொடை கொடுத்துவருவோருள் ஒருவன். நிலயத்தின் தற்பொழுதைய நிலைமையைக் குறித்து நான் விவரமாக விசாரித்தேன். மேற்படி யாட்களால் கூறப்பட்டிருப்பது முழுப்பொய் யென்றும் மேற் குறித்தவருள் ஆ. சுப்பையாவைத்தவிர மற்றமூவரும்நிலயத்தைவிட்டுத் தள்ளப்பட்டுவிட்டார்களென்றும் அங்கத்தினரின் கிரமமான கூட்டத்தில் அவ்வாறு செய்துவிடப்பட்டதென்றும், பள்ளிக்கூடம் ஒழுங்காகநடந்துவருகிறதென்றும், ஆ. சுப்பையா என்பவர் ஏற்கனவே ராஜினாமாச்செய்துவிலகிக்கொண்டுவிட்டாரென்றும் நிலயத்தின் பொறுப்புவாய்ந்த நிர்வாகஸ்தர் ஒருவர்என்னிடம் நேரில் தெரிவித்தார் யார் வேண்டுமானாலும் நிலயத்தின் காரியங்களைப் போய்ப்பார்த்து, பூரண திருப்தியடையலாமென்றும் அவர் அறிவிக்கிறார். கனவான்களே! நமது நாட்டவரான துரதிர்ஷ்டசாலிகளான சகோதரர் சிலரது பொதுவான மனப்பான்மையைப்பற்றி வருத்தத்துடன் குறிப்பிட வேண்டியவனாயிருக்கிறேன். கண்ணியமான அபிப்பிராய வேற்றுமையில் எனக்கு நம்பிக்கையுண்டு. ஆனால், பிறர் விஷயத்தில் விரோதமுண்டானால், பொதுஜன சேவை ஏற்பாடொன்றை நாசம் செய்ய ஒருபொழுதும் குறிக்கொள்ளலாகாது. ஆனால், விஷயங்கள் வேறு விதமாக நிகழ்ந்திருக்கின்றன. திரு. கும்பலிங்கம் தமது குடும்ப வாழ்க்கைக்காகவே நிலயத்தை உபயோகப்படுத்திக் கொள்வதாகக் கடிதம் கூறுகிறது. இது உண்மையல்ல. விசாரித்ததில், அது முற்றிலும் தவறு என்று நான் அறிந்தேன். ஏன் அவர்கள் இப்படி முழுப் பொய் கூற வேண்டும்? நல்லொழுக்கமில்லாதவர்களான விலக்கப்பட்டவர்கள் கைக்கு இனி ஆசிரமம் வரப்போவதில்லை. நிலயத்தை வழக்கம்போலவே நடத்துமாறு நிலய அங்கத்தினரை நான் வேண்டிக்கொள்ளுகிறேன். அந்த நிலயத்தில் யாதும் கெடுதல் இல்லை. விரோதிகள் நிரைத்திருப்பவை சிறிதும் ஆதாரமற்றவை. நன்கொடையாளர் அவர்களது வார்த்தையின் ஒரு எழுத்தைக்கூட நம்பலாகாது என்ற ஒரே நோக்கத்துடனேயே இதனை நான் எழுதுகிறேன்.

எம். ராமமூர்த்தி.



## காந்தி வாசகசாலை, சிராவயல்.

சுக்கிலஆு புரட்டாசிமீ ௯ல-இன்று மாலை ௬-மணிக்குக் கூடிய கூட்டத்தின் அடியிற் குறிப்பிடும் தீர்மானம் நிறைவேற்றப்பெற்றது:—

"இவ்வாசகசாலையின் காரியதரிசியாகவிருந்த திரு. ப. ஜீவானந்தன் அவர்கள் இவ்வூரில் ஒழுக்கத்தவறான செயல்கள் பல செய்து இவ்வூரை விட்டு வெளியேறிவிட்டதால் அவரை இவ்வாசகசாலையின் காரியதரிசிப் பதவியினின்றும் இக்கூட்டம் விலக்குகின்றது."

பி. ஆறு. ராம. இராமசாமிசெட்டியார்
தலைவர்,

## விவேகாநந்தா காற்பந்துக் கழகம், (சிராவயல்.)

சுக்கிலஆு புரட்டாசி ௯ல-இன்று மாலை ௫-மணிக்குக் கூடிய கூட்டத்தில் அடியிற்கண்ட தீர்மானம் ஏகமனதுடன் நிறைவேற்றப்பட்டது:—

"இக்கழகத்தின் தலைவாயிருந்த திரு. ப. ஜீவானந்தன் அவர்கள் இவ்வூரில் சில ஒழுக்கத்தவறான செயல்கள் செய்துவிட்டு இவ்வூரினின்றும் வெளியேறிவிட்டதால் அன்னாரை அழுத்தமாகக் கண்டிப்பதோடு இக்கழகத் தலைவர், அங்கத்தினர் பதவிகளினின்றும் இக்கூட்டம் நீக்குகின்றது."

கோ. இராமச்சந்திர பாண்டியன்
காரியதரிசி.

ஊழியன்

மன்னவர் தமக்கும் அஞ்சேன்
மாண்பெரும் நாட்டிற் காக
என்னுயிர் தனையும் ஈவேன்
எதற்குமியான் யாண்டும் அஞ்சேன்
பன்னரும் பார தத்தாய்
பண்டைவாழ் வெய்தப் பாரில்
ஒன்னலர்க் கஞ்சா நல்ல
ஊழியம் தலைமேற் கொண்டேன்.

ஊழியன் காரைக்குடி
சுக்கில-ளூ புரட்டாசி-மீ கூ-உ

## சீர்திருத்தக்காரர்.

சீர்திருத்தக்காரர் என்று ஒரு கூட்டத்தார் நாட்டில் மலிந்து வருகின்றார். அன்னருள் பல்லோர் சீர்திருக்காரர் என்று தங்களைக் கூறிக்கொள்தல் பெருமை என்ற ஒன்றுகொண்டே வெளிவருகின்றார் எனக் காண்கின்றது. சீர்திருத்தக்காரர் என்று தங்களைக் கூறிக்கொண்டு தாங்கள் எவ்வளவு சீர்கேடான காரியங்களையும் செய்யலாமென்று சிலர் கருதிவிடுகின்றார். சீர்திருத்தக்காரர் என்று தங்களைக் கூறிக்கொள்வதனால் தாங்கள் செய்யும் சீர்கெட்ட செயல் மறைந்துவிடும் என அன்னர் கருதுவது விந்தையல்லவா? சீர்திருத்தம் உலகத்திற்கு வேண்டுவதே. "அது வேண்டாம், யாவும் இருந்தபடியே இருத்தல் வேண்டும்" என அறிஞர் கூறார்.

சீர்திருத்துவது எதை என்பது வினா? எது சீர்கேடெய்தியதோ அதனைச் சீர்திருத்துதல் வேண்டும். ஒழுங்காக இருக்கும் ஒன்றைச் சீர்திருத்துகிறேன் என்று கிளம்புதல் மதிக்குறைவு. சீர்திருத்த வேண்டுவது இன்னின்ன என வரையறுத்துக் கூறிவிட முடியாது. சீர்திருத்தம் நாட்டிற் கேற்றபடியாக—காலத்திற்கேற்றவாறாக அமையும். சீர்திருத்தஞ் செய்ய முனைவோர்—சீர்திருத்தக்காரர் என்போர், அறிவு நிரம்பியவராக இருத்தல் வேண்டும். நாட்டிற்கு நலஞ் செய்யவேண்டிய சீர்திருத்தக்காரர் என்போர் இந்நாள் நாட்டைக் கெடுத்து வருகிறார். காரணம் சீர்திருத்தக்காரர்பால் உள்ள குறையே.

சீர்திருத்தக்காரர் என்போர் ஒன்றும் அறியாதவராக—ஒரு நூலைக்கூடப் புரட்டிப் பார்க்கத் தெரியாதவராக இருந்தால் சீர்திருத்தம் நிலைக்காது. ஒன்றுமறியாத ஒருவருக்கு எதைச் சீர்திருத்துவது என்பது எப்படித் தெரியும்? ஒன்றுமறியாதவரைக்கூடத் தலைவரென்றும் மாபெருந்தலைவரென்றும் அதற்கு மேலும் கூறும் நிலை வருமானல் அது மக்களின் பிற்போக்கையே காட்டுமன்றி வேறன்று. ஈண்டு "கல்லாத மூடர்க்குக் கல்லாதார் நல்லாராம், கல்லாத மூடர் கருத்தறியாரே" என்னும் திருமூலனர் திருவாக்கு நினைவிற்கு வருகிறது.

சீர்திருத்தக்காரர் எத்தன்மையரோ அத்தன்மையாகவே அவர் பேசும் சீர்திருத்தமும் இருக்கும். அறிஞரின் சீர்திருத்தத்திலேயே அறிவுடைச் செயலைக் காணமுடியும். சீர்திருத்தம் என்ற சொல்லைக் கேட்டு மக்கள் மயங்குதல் ஆகாது. பிறரைச் சீர்திருத்த விரும்பும் ஒருவன் முதலில் தான் திருந்திக்கொள்ளுதல் வேண்டும். தான் திருந்தாது பிறர்க்குக் கூறுவதை உலகம் ஏற்காது. சீர்திருத்தக்காரன் என்பவன் முதலில் கொள்ளவேண்டுவது ஒழுக்கம். தீய ஒழுக்கினன், சீர்திருத்தம் பேசுதல் பொருத்தமற்றது. சீர்திருத்தம் சீர்திருத்தம் என்று மேடைகளில் பேசுதல் மட்டும் பெருமையுடையது என்று கருதுதல் பிழை. சீர்திருத்தம் பேசுவதால் ஒருவன் மேன்மையடையவும் அது பேசாததால் ஒருவன் தாழ்மைப்படவும் முடியாது. இரண்டு வகையினருள்ளும் பெரியார் சிறியார் உளர். பெருமைக்கும் சிறுமைக்கும் உரியது அவரவர் ஒழுக்கம். ஒழுக்கமில்லாச் சீர்திருத்தக்காரராலேயே நல்ல திருத்தங்கள் அரும்புதல் அருமையாக இருக்கிறது.

## இடி முழக்கம்.

### இன்னேர் தியாகி.

சென்ற வியாழன் இரவு, இன்னேர் உண்ணாவிரதத் தியாகி உயிர் நீத்தது கேட்டு, திடுக்குற்றோம். பர்மாவில் பொங்கி விஸ்யாஎன்ற அன்பர் நான்கு மாதம் தொடர்ந்து சிறையில் உண்ணாவிரதம் செய்துவந்து ஆவிதுறந்திருக்கிறார். அவர் ராஜத்துரோகக் குற்றம் சாற்றிச் சிறைப்படுத்தப் பெற்றவர். பொங்கிகளின் குற்றம் யாதாயினும், விழா நாட்களில் அவர்கள் மஞ்சள் உடையணியவும், ஒரு மாதத்தில் இருமுறை உபவாசமிருக்கவும் அனுமதிக்க வேண்டுமென்பதே அவர் கோரிக்கை. இந்தக் கோரிக்கைக்கு நான்கு மாதமாக இணங்காத தன் பிடிவாதத்தால், பர்மா அரசாங்கம் பெரியார் விஸ்யாவின் உயிரைப்பருகிவிட்டது. இறுதி நேரத்தில், அரசாங்கம் இணங்கியதாம். ஆனல், எல்லாம் மிஞ்சிப் போன பிறகு. சிறைவிதிகளின் கொடுமையும், அரசாங்கத்தின் வன்னெஞ்சமுமே இத்தகைய நிகழ்ச்சிகளால் புலனுகின்றன. அரசாங்கம் ஒருபுறம் கிடக்கட்டும். உயிரைத் துரும்பென மதித்து, நியாயத்திலே பிடிவாதங்கொண்டு, ஆவியையும் தியாகம் செய்யும் இத்தகைய பெரியார்களை—அவர்களது வீரத்தை—அவர்களின் எல்லையில் தியாகத்தை, "என்றென்றும் வாழி" யென நாம் வாழ்த்தக் கடமைப்பட்டிருக்கிறோம்.

## முனிசிபல் கூட்டம்.

### புதிய தலைவரின்கீழ்க் கூடியது.

செப்டம்பர்மீ உ0உ வெள்ளிக்கிழமை மாலை காரைக்குடி முனிசிபாலிடியின் கூட்டம் ஒன்று, புதிய சேர்மன் ராவ்பகதூர் ஆவி. பழ. சிதம்பரஞ் செட்டியாரவர்களின் தலைமையில் கூடியது. எழெட்டு அங்கத்தினர் வந்திருந்தார்கள். கூட்டத்தில் முடிவு செய்யப்பட்ட முக்கிய விஷயங்கள் வருமாறு:—

**சில எஸ்டிமேட்டுக்கள்.**

முனிசிபல் வைத்திய அதிகாரி (மெடிகல் ஆபீஸர்) கட்டிடத்தைப் பழுது பார்க்க கச0 ரூபாயும், முனிசிபல் வைத்தியசாலைக் காம்பவுண்டுக்குள் வசூரி வைக்கும் கொட்டகை ஒன்று கட்ட சகருு ரூபாயும், கழனிவாசலுக்கு வடக்கே உ0-நீ. ரஸ்தாவிலிருந்து ௩அ-நீ. பாலம் வரை, கஅ-நீ. ரஸ்தாவைப் பரிபாலிக்க உ000 ரூபாயும் அனுமதிக்கப்பட்டன.

உ0-நீ. ரஸ்தாவில் ரு-வது மைலில் க-முதல் ச பர்லாங்கு வரையிலும் கப்பிபோட ரூ. கருஅ0 அனுமதிக்கப்பட்டது.

முன்விபல் கட்டிடத்திற்கு மேற்புறம் முனிசிபல் கட்டிடத்தை ரிபேர் செய்யக் கொடுத்திருக்கும் ரு00 ரூ. கண்டிராக்டு அங்கீகரிக்கப்பட்டது.

**வரி விலக்கு.**

எண்டர்ட் டெயின்மெண்டு வரியிலிருந்து தஞ்சாவூர் ஸ்ரீ சுதர்சன சபாவை விலக்கச் செய்யப்பட்ட முந்திய தீர்மானம் சர்க்கார் உத்திரவு முதலியவற்றை யனுசரித்து, மேற்படி சபாவிடமிருந்து வாங்கப்பட்ட தொகை ரூ. உசஎ—க0—0-ம் வாபீஸ் செய்ய அனுமதிக்கப்பட்டது.

**குப்பைவண்டி வாடகை இடம்.**

முனிசிபல் குப்பை வண்டிகள் வகையறுக்களை நிறுத்த ஒரு வாடகை இடம் ஏற்பாடு செய்யும் விஷயம் அடுத்த கூட்டத்திற்கு ஒத்திப்போடப்பட்டது.

**காரியதரிசிக்கு அதிகாரம்.**

முனிசிபல் கவுன்ஸிலுக்குச் செலுத்தப்படும் தொகைகளுக்கு ரசீது கொடுக்க, காரியதரிசிக்கு (செக்ரடரிக்கு) அதிகாரமளிப்பதாய்த் தீர்மானிக்கப்பட்டது.

**எல்லையை விஸ்தரிக்க.**

முனிசிபல் எல்லையை விஸ்தரிக்க எ—கூ—உகூ-உ செய்யப்பட்ட தீர்மானமும், சர்க்கார் மெமோவும், ஆபீஸ்நோட்டும் ஆலோசிக்கப்பட்டன. முனிசிபல் எல்லையை விஸ்தரிக்கும் விஷயத்தை, ரயில்வே வசதி ஏற்பட்ட பிறகு கவனிக்கலாமென்று தீர்மானிக்கப்பட்டது.

**சுங்கவரியில் பங்கு.**

முனிசிபாலிடியின் சுங்கவரி வருமானத்தில் ஐந்திலொரு பங்கை க—ச—உகூ-உ முதல் ஜில்லாபோர்டுக்கு அளிக்கவேண்டுமென்று இராமனுதபுரம் ஜில்லா போர்டு கூ—அ—உகூ-உ செய்துள்ள தீர்மானம் ஆலோசனைக்குவந்தது. பிற முனிசிபாலிடிகளுக்கு எழுதி அவற்றின் பதிலை அறிந்து முடிவுசெய்வதெனத் தீர்மானிக்கப்பட்டது.

**பன்றி விஷயம்.**

முனிசிபல் எல்லைக்குள் பன்றிகள் இல்லாது அப்புறப்படுத்த, லைசன்ஸ் கொடுக்காமலிருப்பதென்று தீர்மானிக்கப்பட்டது.

**அலைந்து திரியும் நாய்.**

அலைந்து திரியும் நாய்களைக் கொல்லுமிடம் ஒன்று சுமார் கரு0-நாய்கள் கொல்லக்கூடியதாகக் கட்ட அனுமதிக்கப்பட்டது.

**பொதுக்கக்கூஸ்.**

முத்துப்பட்டினத்தில் ஸர்வேயர் பிளானில் குறிப்பிட்டவிடத்தில் ஒரு பொதுக் கக்கூஸ் கட்டத் தீர்மானிக்கப்பட்டது.

**சிப்பந்தி அப்பீல் கமிட்டி.**

முனிசிபல் சிப்பந்திகளின் அப்பீல் கமிட்டிக்கு, ராவ்பகதூர் ஆவி. பழ. சிதம்பரம் செட்டியாரவர்கள் ஸ்தானத்திற்கு திரு. வெ. ராம. லெ. ராமசாமிச் செட்டியார் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

**ஸ்டீம் ரோலர்.**

கூ-டன் ஸ்டீம் ரோலர் வாங்குவதற்கு அனுமதிக்கப்பட்டது.

**ஓவர்சீயர்.**

ரூ. அ0—எஇ—கஉரு சம்பளத்தில் முனிசிபல் ஓவர்சீயர் அகப்படவில்லையாகையால், ரூ கஙc—க0—உரு0-ஸ்கேலில் ஒருவரை நியமிப்பதென்று முடிவு செய்யப்பட்டது.

## தந்தி.

பினங்கு சுக்ல புரட்டாசி அஉ

| | |
|---|---|
| உண்டியல் | நூற்று ஐம்பத்து நான்கு. |
| ஈயம் விலை | நூற்று ஐந்து. |
| ரப்பர் விலை | நாற்பத்தாறு. |

ரங்கூன் சுக்ல புரட்டாசி அஉ

| | | |
|---|---|---|
| பெரியமில் அரிசி, | செப்டம்பர் | சருரு |
| ,, | அக்டோபர் | சகூ0 |
| சிறியமில் அரிசி, | செப்டம்பர் | சஎஎ-அ-0 |
| ,, | அக்டோபர் | சஅஉ-அ-0 |
| பிப்ரவரி, ஏப்ரல் சிறியமில் | | சஙரு-0-0 |
| ,, | பெரியமில் | சஉ0-0-0 |
| படகு நெல் | | ககூரு, ககூஎ-0-0 |
| ரயில் ,, | | ககூங, ககூகூ-0-0 |
| மீடான் அரிசி | | உ00, உ0ச-0-0 |

பண மார்க்கெட் நிலையாயிருக்கிறது.

## உள்ளூர்.

| | |
|---|---|
| செய்கோன் வட்டம் | க-கஉ-0 |
| சிங்கப்பூர் வட்டம் | க-கஉ-0 |
| பினங்கு வட்டம் | க-கஉ-0 |
| கொழும்பு வட்டம் | 0-அ-0 |
| சென்னை வட்டம் | 0-உ-0 |
| டி ஆவணிமீ நடப்புவட்டி | 0-கூ-0 |
| ஈப்போ வட்டம் | உ-0-0 |
| ரங்கூன் உண்டியல் வட்டம் | 0-அ-0 |
| பவுன் | கங-க0-0 |

எடுபட்ட மீனும்பிகை:—இவ்வூரில் நடந்துவந்த மீனும்பிகை அச்சுக்கூடம் எடுபட்டுவிட்டது. அதில் வேலை பார்த்துவந்த சிப்பந்திகள் யாவரும், புதிதாக ஏற்பட்டுள்ள "டயமண்ட் பிரஸ்"ஸில் வேலை பார்த்து வருகிறார்கள்—(ந. நி.)

ரயில்பாதை வேலை:—காரைக்குடி ஸ்டேஷனுக்குக் குறிக்கப்பட்டிருக்கும் இடத்திற்கு முக்கால்மைல் தூரம் வரையில் புதுக்கோட்டை—காரைக்குடிப்பாதை போட்டாகிவிட்டது. அது வரையில் இப்பொழுது பாலஸ்டுவண்டி தாராளமாக வந்து சென்றுகொண்டிருக்கிறது. மானமதுரை காரைக்குடிப் பாதையில் இன்னும் பதினன்குமைலே பாக்கியிருப்பதாகத் தெரிகிறது. இருபுறமிருந்தும் தொடர்ந்து போட்டுச் சென்றால், இன்னும் ஒரு மாதத்தில் பாதை வேலை முடிந்துவிடும் என்று தோன்றுகிறது. வரும் ஜனவரிமாதத்தில் அநேகமாக வண்டி விடக்கூடும் என்று தெரிகிறது. (ந. நி.)

ஒரு திருத்தம்:—காரைக்குடி முனிசிபல் சேர்மன் திரு. ஆவி. பழ. சிதம்பரஞ் செட்டியாருக்கு எஸ். எம். எஸ். ஹைஸ்கூலில் நடத்தப்பட்ட உபசார விருந்து உபாத்தியாயர்களாலேயே கொடுக்கப்பட்டது என்றும், 'பிற பதவியினரும் சேர்ந்து' என்று வெளியாயிருப்பது தவறு என்றும் அறிவிக்கப்படுகிறது.

## கப்பல்.

"எதியோபியா"க் கப்பல் இன்று சென்னைத் துறைமுகத்திலிருக்கிறது. இம்மாதம் கஉ-ந் தேதி வெள்ளிக்கிழமை ரங்கூனுக்குப் புறப்படும்.

"டைரியா"க் கப்பல் இம்மீ கரு-ந் தேதி திங்கட்கிழமை சென்னை வந்து, ககூ-ந் தேதி வெள்ளிக்கிழமை ரங்கூனுக்குப் புறப்படும்.

"எக்ரா"க் கப்பல் இன்று நிலம் சென்னைக்கு வந்து, இம்மீ கஉ-ந் தேதி வெள்ளிக்கிழமை நாகப்பட்டினத்திற்குப் புறப்பட்டுச் செல்லும். அங்கிருந்து, இம்மாதம் கச-ந் தேதி ஞாயிற்றுக்கிழமை மலாய் நாட்டுக்குப் பிரயாணமாகும்.



## புதிய சேர்மன் ராவ்பகதூர் சிதம்பரம் செட்டியாருக்கு மற்றோர் உபசாரம்.

காரைக்குடி முனிசிபாலிடியின் புதிய சேர்மன் ராவ்பகதூர் ஆவி. பழ. சிதம்பரஞ் செட்டியார் அவர்களுக்கு, முனிசிபல் காரியாலயக் காரியதரிசியும் (செக்ரடரி) பிற உத்தியோகஸ்தர்களும் சேர்ந்து ஓர் சிற்றுண்டி விருந்து (டீபார்ட்டி) அளித்தார்கள். விருந்து, முனிசிபல் கட்டிடத்தில், சென்ற ஞாயிற்றுக்கிழமை (செப்டம்பர்மீ உஉ-உ) மாலை அளிக்கப்பட்டது. விருந்துக்கு, இரண்டாவது ஸர்க்கிள் வருமானவரி உத்தியோகஸ்தர் திரு. கே. நாராயணசாமி அய்யரவர்கள், பி. எ., தலைமை வகித்தார். விருந்துக்கு உள்ளூரிலிருந்தும் வெளியூரிலிருந்தும் பல பிரமுகர்கள் வந்திருந்தார்கள். பிற இன்கம்டாக்ஸ் ஆபீஸர்களும், திருப்பத்தூர் ஸப்மாஜிஸ்திரேட் அவர்களும், ஆப்காரி இன்ஸ்பெக்டரும், டாக்டர் சுப்பிரமணிய அய்யரும், பிற பிரைவேட் டாக்டர்களும், பெரும்பாலான முனிசிபல் கவுன்ஸிலரும், இன்னும் நகரப் பிரமுகர் பலரும் விருந்தில் கலந்துகொண்டார்கள்.

சேர்மன் அவர்கள் வரும்பொழுது, மங்கலமான மேளவாத்தியத்துடன் அவர் வரவேற்கப்பட்டார். அவரும் விருந்துக் கூட்டத்தலைவரும் ஆசனத்தமர்ந்ததும், முதலில் இனிய சிற்றுண்டி வகைகள் பலவும், காப்பிப்பானமும் வந்திருந்தோரனைவர்க்கும் வழங்கப்பட்டன. பின்னர், தாம்பூலமும் சந்தனமும் வழங்கப்பட்டன. பிறகு, எஸ். எம். எஸ். ஹைஸ்கூல் மாணவர் சிலர், இசையோடு பாடினர்கள்.

**பிரசங்கங்கள்.**

பின்னர், விருந்துக்கூட்டத் தலைவர் திரு. கே. நாராயணசாமி அய்யரவர்கள் முன்னுரையாகச் சிறிது பேசினர். அதன் சாரம் வருமாறு:—நமது ராவ்பகதூர் ஆவி. பழ. சிதம்பரஞ் செட்டியாருக்கு, அரசாங்கத்தார் இந்த முனிசிபாலிடியின் சேர்மன் பதவியை அளித்ததற்காக நமது சந்தோஷத்தைத் தெரிவித்துக்கொள்ளவே இந்தக் கூட்டம் கூடியிருக்கிறது. திரு. செட்டியாரவர்களுக்கு இப்பதவி கிடைத்ததற்கு எல்லாருக்குமே சந்தோஷம். ஆதலால், மற்றவருக்குத் தாங்கள் பின்வாங்காதிருக்கவேண்டும் என்பதற்காக. முனிசிபல் காரியாலயத்தார் இந்த விருந்தை நடத்துவதாக நான் கருதுகிறேன். திரு. செட்டியாரவர்களுக்கு இப்பதவி கிடைத்தது மிகவும் பொருத்தமாகும். இது யூனியனயிருந்த காலமுதலே, அவர் இதில் மிகவும் உழைத்திருக்கிறார். தாலூக்கா போர்டுக்கும் தலைவராயிருக்கிறார். எனவே, தங்கள் சந்தோஷத்தைத் தெரிவிக்க முனிசிபல் உத்தியோகஸ்தர் இந்த விருந்து நடத்துகிறார்கள். நமது நாட்டில் முனிசிபல் நிர்வாகம் மிக முக்கியமாகிக்கொண்டுவருகிறது. திரு. செட்டியாரவர்களிடம் தங்கள் அன்பைக் காட்டுவதற்காக, இந்த விருந்தை முனிசிபல் உத்தியோகஸ்தர் நடத்துவதாக, நான் மதிக்கிறேன். அவருக்குத் தங்களது ஒத்துழைப்பைத் தெரிவிப்பதற்காகவும் இந்த விருந்தை அவர்கள் நடத்துவதாக நான் கருதுகிறேன்.

**காரியதரிசியின் உரை.**

பிறகு, முனிசிபல் காரியாலயக் காரியதரிசி (செக்ரடரி) திரு. ஏ. வி. பாலசுப்பிரமணியம் அவர்கள் பின்வருமாறு உரைத்தார்:—"இன்று இங்குநாம் கூடியிருக்கும்விஷயம் நீங்கள் எல்லோரும் முன்னமேயே அறிந்ததே. தலைவர் அவர்களும் இது விஷயமாய் விவரமாய்ச் சொல்லிவிட்டார். இன்று அக்கிராசனம் வகிக்கும் கனம் கே. நாராயணசாமி அய்யர் அவர்களையும் இன்றைய கூட்டத்துக்குக் காரணஸ்தராயுள்ள ஸ்ரீமான் செட்டியார் அவர்களையும் இங்கு தெரியாதவர்களில்லை. அப்படியிருக்க, காரைக்குடியில் உ-மாத அனுபவமுள்ள நான் அவர்கள் விஷயமாய் உங்களுக்குச் சொல்வது நகைப்புக்கு இடமாகுமென்றும் உத்தியோக முறையில் இச்சமயம் நான் அதிகமாகப் பேசுவது ஒவ்வாது என்றும் அஞ்சி, என் உரையைச் சுருக்கமாக முடித்துவிடுகிறேன். நமது தேசத்தில் சுயராஜ்ய ஊக்கமும் விவாதமும் அதிகரித்துக்கொண்டுவரும் இந்நாளில் காரைக்குடி முனிசிபாலிடிக்கு உத்தியோகஸ்தரல்லாத ஒரு சேர்மன் நியமிப்பது கிரமமாகும். மேலும் அவர் காரைக்குடி பூர்வீக வாசியாக இருப்பதும் உத்தமம். ஏனெனில் இந்நகரக் குறைபாடுகள் தெரிந்து முக்கியமாயும் அவசரமாயும் வேண்டிய சீர்திருத்தங்களையும் தெரிந்து அவைகளைச் சாதகமாக முடிக்கவேண்டிய வழிகளையும் நன்குணர்வார்கள். நமக்குச் சேர்மனக வாய்ந்த ஸ்ரீமான் செட்டியார் அவர்கள் வயதிலும்பெரியோர். சாந்தமுடையவர். கோபம் இன்னதென்று அறியார். பொருளும் செல்வாக்கும் நிரம்பப் பெற்றுள்ளார். கள். ஈகை மிக்குடையவர். முனிசிபல் உத்தியோகஸ்தர்களாகிய எங்களுக்கு அவசியமாயுள்ள அளவு எங்கள் பால் கருணை நிரம்பியுள்ளார். ஆனல் கருணை எங்கள் பால் மிகுந்து எங்கே எங்களைச் சரிவர வேலை வாங்காமலிருக்கிறார்களோவென்று சிலர் கவலைகொண்டுள்ளார்கள். ஆனல் நாங்கள் சம்பளத்துக்கு மட்டுமே உழைக்காது தேசத் தொண்டு உணர்ச்சி உள்ளவர்களாய் எங்கள் வேலையைக் கிரமமாகச் செய்துவருவோமென்று இச்சபையின்கண் மிகத் தாழ்வுடன் முனிசிபல் உத்தியோகஸ்தர்கள் சார்பாகத்தெரிவித்துக்கொள்ளுகிறேன். ஸ்ரீமான் செட்டியார் அவர்களுக்கு நீண்ட ஆயுளும் திடகாத்திரமும் பெருமையும் மென்மேலும் ஓங்கும்படி எல்லா வல்ல ஈசன் கிருபை செய்யும்படி வேண்டுகிறோம்."

**பிறர் உரைகள்.**

பிறகு, சுகாதார இன்ஸ்பெக்டர் திரு. டி. எஸ். சீனிவாச அய்யர் அவர்கள் கொஞ்சம் பேசுகையில் தாங்கள் ஏற்கனவே யூனியனயிருக்கையிலேயே திரு. செட்டியார் அவர்களிடம் உழைத்திருப்பதாகவும், அவர் கருணை நிறைந்தவர் என்றும், எனினும் போதிய கண்டிப்பும் உடையவரென்றும் கூறி, புதிய சேர்மனின் விசேஷ குணங்களைப் பற்றி வியந்து சில வார்த்தைகள் உரைத்தார்.

பின்னர், எஸ். எம். எஸ். ஹைஸ்கூலின் தலைமை உபாத்தியாயர் திரு. வெங்கிட்டராம அய்யர் அவர்கள் எம். ஏ., எல். டி., சிறிது பேசினர். அதன் சாரமாவது:—முக்கிய விருந்தினர் யாரென்பது உங்கட்குத் தெரியும். ஏனைய விருந்தினர் சார்பாகச் சிறிது பேசுகிறேன். ராவ்பகதூர் ஆவி. பழ. சிதம்பரஞ்செட்டியாரவர்களுக்கு விசேஷக் கருணையுண்டு என்று கூறுகிறார்கள். இது உண்மை. மகா பிசகான காரியங்களைச் செய்தவர்களைக்கூட அவர் மன்னித்துவிடுவது எனக்குத் தெரியும். இரண்டாவதாக, முனிசிபாலிடியார் ஜனங்களுக்கு இம்சை செய்வதாகப்புகார்இருந்துவருகிறது. இதன் காரணம் ஜனங்கள் ஏதாவது லைசென்ஸ் முதலியவைகளைப்பற்றி மனுக்கொடுத்துக்கொண்டால், அது மூன்று மாதம் கவனிக்கப்படாமலே பெட்டிக்குள் இருந்துவிடுகிறது. இதை விலக்கவேண்டும். எதற்கும், உடனே ஒரு வாரத்திற்குள் பதிலளித்துவிட வேண்டும். குறைந்த பட்சம் ஒரு மாதத்திற்குள் பதில் கிடைத்தால் ஜனங்களுக்குச் சந்தோஷமுண்டாகிவிடும். இதை திரு. செட்டியாரவர்களும், முனிசிபாலிடி உத்தியோகஸ்தரும் ஒத்துழைத்துக்கவனிக்க வேண்டும். இன்னென்று, முனிசிபல் காரியாலயத்துக்கு ஜனங்கள் வந்து ஏதாவது தகவல் கேட்டால், சட்டை முதலியன அணிந்துவருவோர்க்கு ஒருவிதமாகவும், பிறருக்கு வேறு விதமாகவும் நடந்துகொள்ளுவதாகச் சொல்லப்படுகிறது. ஜனங்களுக்குத் தகவலளிப்பதற்காகவே (என்கொயரி ஆபீஸர்) என்ற உத்தியாகஸ்தர் ஒருவரை நியமித்தால் இந்தக் குறை ஒழியும்.

இவ்வாறு கூறி, விருந்தில் தமது களிப்பைத் தெரிவித்து, திரு. அய்யர் தமது உரையை முடித்தார்.

பின்னர், திரு. சா. லெ. செட்டியப்ப செட்டியாரவர்கள் பேசியதன் சாரமாவது:—நமது முனிசிபாலிடி குழந்தைப் பருவத்திலேயே யிருக்கிறது. இதற்குள் குறைகூறுவது கூடாது. இன்னும் 'விஸ்டமாக' (முறையாக) ஒன்றும் ஏற்படவில்லை. இப்பொழுதுதான் கொஞ்சம் கொஞ்சமாக ஏற்பட்டுவருகிறது. இதற்குள் குறைகூறக் கூடாது. சர்க்கார் உத்தியோகத்தில் கருணை கூடாது. இங்கே நமது கடமையையே நாம் செய்யவேண்டும். ஊருக்கு நன்மை செய்தல் வேண்டும். ரஸ்தா முதலிய எல்லாச் சீர்திருத்தமும் இரண்டொரு வருடத்தில் இயன்றுவிடாது. ரஸ்தாவில் இரண்டடியை எடுத்துக்கொள்ளவே ஜனங்கள் விரும்புகிறார்களேயொழிய, அதில் அபிவிருத்தியை எண்ணவில்லை. மற்ற இடங்களைப் போல இல்லாமல், இங்கு ஒரு சதுர அடி நிலம் ரு0-ரூபாயாகவிருக்கிறது. கொப்புடையம்பாள் ரஸ்தாவைச் சீர்செய்ய க0-வருட காலமாக ராவ்பகதூர் சிதம்பரஞ் செட்டியாரவர்கள் முயன்றும் இயலவில்லை. பணத்தினல் இதெல்லாம் முடிந்துவிடாது. உரியவர்களைக் கொண்டுதான் செய்து முடிக்க வேண்டும். முனிசிபல் காரியாலயத்தில் தாக்கல்களளிப்பதில் வித்தியாசம் கூடாது. யாருக்கும் பொதுவாக, நியாயமாக நாம் செய்யவேண்டியதையே செய்ய வேண்டும். முனிசிபாலிடியாலேயே நகரத்திற்குச் சகல காரியங்களும் சீர்பெற வேண்டும். நாம் யாவரும் ஜனங்களும் அதற்கு ஒத்துழைக்க வேண்டும். அவ்வாறு நாலு அல்லது ஆறு வருடத்தில் சீர்ப்பட்ட பின்னரே, இது முனிசிபாலிடியாகும். அதற்கு அனுகூலமாக எல்லாரும் ஒத்துழைக்க வேண்டும்.

பின்னர், உபாத்தியாயர் திரு. கே. எஸ். சுப்ப அய்யர் சிறிது பேசினர்.

**முக்கிய விருந்தினரின் பதில்.**

பிறகு, புதிய சேர்மனை ராவ்பகதூர் ஆவி. பழ. சிதம்பரஞ் செட்டியாரவர்கள் அளித்த பதில் வருமாறு:—

"தலைவர் அவர்களே! விக்ரட்டரி முதலிய முனிசிபல் உத்தியோகஸ்தர்களே! விஜயம் செய்திருக்கும் மற்றைய கனவான்களே!

"தலைவரவர்கள் என்மீதுள்ள அபிமானத்தினல் இவ்வமயம் தலைமை வகித்தும் என்னைப் பாராட்டிப் பேசியுமிருக்கிறார்கள். அவர்களுக்கு என் மனமுவந்த வந்தனத்தைச் செலுத்துகின்றேன். தலைவர்போன்ற பெரியாருடைய அபிமானமும் புத்திமதிகளும் ஆசீர்வாதங்களும் எனக்கு இருக்கும்வரை என்னுடைய முனிசிபல் பரிபாலனம் வெற்றியுள்ளதாகும் என்பதற்குச் சந்தேகமேயில்லை.

"ஒரு ஆபீஸிலுள்ள உத்தியோகஸ்தர்கள் அந்த ஆபீஸின் தலைவருக்கு உபசார விருந்தளிப்பது சகஜமே. ஆனல் தலைவர் தன் பதவியைவிட்டு அகலும்போது அளிப்பதேயல்லாது புகும்போது செய்ததேயில்லை. உபசரிக்கப்படும் தலைவர் சிலருக்கு உத்தியோகம் கொடுத்து இருக்கலாம். பலருக்கு பிரமோஷன் சந்திருக்கலாம். பொதுவாக உத்தியோகஸ்தர்களின் கஷ்ட நிஷ்டூரங்களைத் தீர்த்து இருக்கலாம். அறியாமையால் செய்த சிலருடைய பிழைகளை மன்னித்திருக்கலாம். ஆதலால் நன்றி பாராட்டித் தலைவரை கனப்படுத்துவதுண்டு. இன்று நடக்கும் உபசாரனை விசித்திரமாக எனக்குத் தோன்றுகிறது. முதலில் இந்த உபசாரனையை ஏற்கவேண்டாமென்று எண்ணினதுண்டு. பிறகு பின்வரும் காரணங்கள்பற்றி ஏற்றுக்கொண்டவனுனேன்.

"முனிசிபல் உத்தியோகஸ்தர்கள் தாங்கள் என்னிடம் எதிர்பார்க்கும் விஷயங்களை எடுத்துச் சொல்லவோ மற்றவரைக்கொண்டு சொல்லுவிக்கவோ ஒரு அவகாசம் ஏற்படுகிறது.

"இரண்டாவது, வந்திருக்கும் பிரமுகர்களாவது நானாவது உத்தியோகஸ்தர்களிடமிருந்து எதிர்பார்ப்பனவற்றை இச்சமயத்தில் தெரிவிக்கவும் கூடும். இவ்விரண்டும் நேராவிடினும் ஒத்துழைக்கவேண்டிய தலைவருக்கும் உத்தியோகஸ்தர்களுக்கும் ஒரு விதமான சௌஜன்யம் உண்டாகும். இக்காரணங்களைக்கொண்டுதான் நான் இவ்விருந்தை ஏற்றுக்கொண்டேன்.

"என்னிடத்தில் இல்லாத குணங்களை ஆரோபித்தும் குறைவாக இருப்பவற்றை நிறைவாகக் காட்டியும் பல கனவான்கள் இன்று பேசியிருக்கிறார்கள். இல்லாதவற்றை உண்டாக்கவும் இருப்பவற்றைப் பெருக்கவும் கடவுளைப் பிரார்த்திக்கின்றேன்.

"இச்சமயம் உத்தியோகஸ்தர்கள் சம்பந்தமாக ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகின்றேன். திறமைக்கும் ஊக்கத்திற்கும் நான் மதிப்புக் கொடுப்பேனேயன்றி, எனக்கு வேண்டியவர் வேண்டாதவர் என்றாவது என்னை அடிக்கடி வந்து பார்ப்பவர் பார்க்காதவரென்றாவது மதிப்புத் தரமாட்டேன்.

"ஜாதிமத வேற்றுமைகளைப் பாராட்டி ஏற்றத் தாழ்வுகள் செய்ய என் மனம் இடம் கொடாது. உத்தியோகஸ்தர்கள் ஒவ்வொருவரும் நகரவாசிகளின் ஊழியத்திற்காக நியமனம் பெற்றவர்களென்று நன்கு உணர்ந்து அவர்களுடைய சௌகரியத்தையே தேடவேண்டும். அதிலும் சாமானிய ஜனங்களுக்கு ஹிம்ஸை தரா வண்ணம் உதவிபுரிய வேண்டும். இந்த விஷயத்தில் அதிக ஜாக்கிரதை தேவை. இவ்வூரிலுள்ள நகரவாசிகள் யாவரும் என்னிடம் தாராளமாய்வந்து, தவறி நடப்பவர்களுடைய நடத்தையைப் பற்றிச் சொல்லுவார்கள். அவற்றை விசேஷமாய் நான் கவனிக்கவேண்டியவனுவேன். மேலும் உத்தியோகஸ்தர்களுக்கு எந்தவிதத்திலாவது சௌகரியங்கள் செய்து கொடுக்கவேண்டுமானல் நான் செய்து கொடுக்க என்னல் கூடிய மட்டும் முயற்சிப்பேன். உத்தியோகஸ்தர்களுக்குள் பரஸ்பர நேசமும் ஒத்துழைப்பும் பரவவேண்டுமென்று நான் விரும்புகிறேன்.

"இன்று முனிசிபல் உத்தியோகஸ்தர்கள் தங்கள் பிரியத்தையும் மரியாதையையும் காண்பிக்குமாறு எனக்கு விருந்தளித்ததற்கு நான் என் மனமார்ந்த வந்தனத்தைச் செலுத்துகிறேன். அவர்களுடைய எப்போதைய க்ஷேமத்தையும் கோருகிறேன்.

"கடைசியாக ஒரே வார்த்தை. முனிசிபல் உத்தியோகஸ்தர்களுடைய அழைப்புக்கு இணங்கியும் என்னைக் கௌரவிக்கவும் இங்கு வந்துள்ள இவ்வூரிலுள்ள கனவான்களுக்கும் நண்பர்களுக்கும் நான் என் வந்தனங்களைச் செலுத்தி என் பேச்சை முடித்துக்கொள்ளுகிறேன்."

**தலைவர் முடிவுரை.**

பிறகு, விருந்துக் கூட்டத்துக்குத் தலைமை வகித்த திரு. நாராயணசாமி அய்யரவர்கள் கூறியமுடிவுரையின் சாரமாவது:—பேசியவர், இச்சமயத்தில் சேர்மனுக்கும், முனிசிபல் உத்தியோகஸ்தருக்கும் பொருத்தமான விஷயங்களை அழகாகப் பேசினர்கள். முனிசிபாலிடி, நகரத்தாரின் சுகதுக்கங்களைக் கவனிக்க வேண்டியதாகும். முனிசிபல் சிப்பந்திகளை நன்குநடத்தவும், முனிசிபல் காரியங்களைப் பாரபட்சமின்றி இயற்றவும் வேண்டுமாதலால், சேர்மனுக்குக் கருணை வேண்டும். பெரியோர் ஐயம் நீங்க இது விஷயத்தைச் சேர்மன், சுருங்கச் சொல்லி விளங்கவைத்தார். அவருடைய கடமை யாதென்பது அவருக்குத்தெரியும். அதனை யாரும் அவருக்குச்சொல்லவேண்டியது தேவையல்ல. அவர் கண்டிக்கவேண்டியவரைக் கண்டிக்கவேண்டும்; இதமாகப் பேசவேண்டியவரிடம் இதமாகப் பேச வேண்டும். ஜனங்களை நிர்வகிப்பதற்குரிய நல்ல குணங்களெல்லாம் அவருக்கிருக்கின்றன. முனிசிபாலிடியார் பலவேலைகள் செய்யலாம். குழந்தைகட்கு நல்லபாலை வாங்கி, சில முனிசிபாலிடிகள் விற்கின்றன. ஆதரவற்ற குழந்தைகட்கு உடை உணவு சில முனிசிபாலிடிகள் அளிக்கின்றன. இவ்விரண்டும் போல திரு. செட்டியார் அவர்கள் காலத்தில் பல காரியங்கள் நடக்குமென நான் நம்புகிறேன். அவர் காலத்தில், பணக்காரர் ஏழை, நல்ல உடுப்பு அணிந்திருப்பவர் அதில்லாதவர் என்றவித்தியாசமில்லாமல், ஒரே மனப்பான்மையுடன், அன்பையும் ஆத்மாவையுமே பெரிதாகக் கருதி, முனிசிபல் நிர்வாகம் நடைபெறுமென நான் நம்புகிறேன். சேர்மன் ராவ்பகதூர் சிதம்பரஞ் செட்டியாரவர்கள் கடவுள் பக்தியுடையவராதலால், அவருக்குக் கடவுள் கிருபைபுரிந்து, அவரது கடமைகளை ஆற்றுவதில் உதவி புரிவார். அவருக்கு நீண்ட ஆயுளும், நிறைந்த செல்வமும் உண்டாகுமாறு கடவுளைப் பிரார்த்திக்கிறேன்.

இறுதியில் முனிசிபல் காரியாலயக் காரியதரிசி யாவருக்கும் வந்தனம் கூற, கூட்டம் இனிதுமுடிந்தது.— (ந.-நி.)

## எஸ்ஸக்ஸ் விலை யேறியது.

"டிட்ராயிட்:-எஸ்ஸக்ஸ் கோச்சின் விலையை சுகரு-டாலரிலிருந்து எகூரு-டாலருக்கும், எஸ்ஸக்ஸ் பீட்டன் விலையை சுகரு-டாலரிலிருந்து எகூரு-டாலருக்கும் ஹட்சன் மோட்டார்க் கம்பெனியார் உயர்த்தியிருக்கிறார்கள்" என்று "அமெரிக்கன் ஆட்டோ மோபாயில்" பத்திரிகையில் வெளியாகியிருக்கிறது. இதனலேயே முன் சென்னை விலை கஉரு0 ரூபாயாக விருந்து, ஆகஸ்டு-மீ முதல் கஙரு0 ரூபாயாக உயர்ந்துவிட்டது என்றுதெரிகிறது.

## தேவகோட்டை யூனியன் உரிமை.

### ஹைக்கோர்ட்டுத் தீர்ப்பு.

செப்டம்பர்-மீ கக-ந் தேதி சென்னை ஹைக்கோர்ட்டில் ஜஸ்டிஸ் திரு. வாலஸ் அவர்களால் தீர்ப்புக் கூறப்பட்டது. ஒரு இடத்தகரார் சம்பந்தமாக, தேவகோட்டை யூனியன்போர்டார், அதுபொதுத்தெருவின் (பப்ளிக் ஸ்டிரீட்) ஒரு பகுதி யென்பதாக, ககூஉக-ம் ஆண்டு ஜுன்-மீ உக-உ பன்று பிரதிவாதிகள்மீது, ஓர் வியாச்சியம் போட்டார்கள் இதர காரணங்கட்கிடையே, யூனிபோர்டை அமைத்தசர்க்கார் விளம்பரம் வியாச்சியம் போடப்பட்டதற்கு வெகு நாட்களுக்குப் பிறகு, ககஉஉ-ம் ஆண்டு மார்ச்சு-மீ கூ-உ வெளியிடப்பட்டிருப்பதால், வியாச்சியம் முறைப்படி போடப்படவில்லை யென்று பிரதிவாதிகள் வாதித்தார்கள். எனவே, போர்டுக்கு இவ்வியாச்சியம்போட உரிமையில்லையென்று கீழ்க் கோர்ட்டார் தள்ளிவிட்டார்கள். இதன் மேல், யூனியன் போர்டார் ஹைக்கோர்ட்டில் அப்பீல் செய்துகொண்டார்கள். கீழ்க் கோர்ட்டுத் தீர்ப்புச் சரியென்று ஹைக் கோர்ட்டார் அப்பீலைச் செலவு தொகையுடன் தள்ளிவிட்டார்கள்.

---

## திரு. தெ. பெ. நாகப்பர்.

திரு. தெ. பெ. நாக. நாகப்ப செட்டியார், புரட்டாசி-மீ கூ-உ புறப்படுகிற "ரசுலா"க் கப்பலில் தைப்பினுக்குப் புறப்பட்டார் என்று அறிவிக்கப்படுகிறது.

---

## ஜில்லா உபாத்தியாயர் கில்டு.

### முதலாம் மகாநாடு.

(க) ராமனுதபுரம் ஜில்லா உபாத்தியார் கில்டின் முதலாம் மகாநாடு காரைக்குடியில், செப்டம்பர்-மீ உஅ-உ சனிக்கிழமை, எஸ். எம். எஸ். ஹைஸ்கூலில் நடைபெறும்.

(உ) பின்வரும் நிகழ்ச்சிகள் நடைபெறும்:— காலை கக-மணிக்குப் பகல் போஜனம் அளிக்கப்படும். கஉ-மணிக்கு ராமனுதபுரம் ஜில்லாக் கல்வியதிகாரி திரு. டி. பி. கிருஷ்ணசாமி முதலியாரால் மகாநாடு திறக்கப்பெறும். ஒன்றரை மணி முதல், பள்ளத்தூர் திரு. எஸ். என். சங்கர அய்யரவர்கள் எம். ஏ., எல். டி., பூகோளசாஸ்திர போதனை என்பது குறித்தும், சாத்தூர் திரு என். மகாதேவ ஐயர், பி. ஏ., எல், டி., பள்ளிக்கூடங்களில் அகராதிகளின் (டிக்ஷனரி) உபயோகங்கள் என்பது குறித்தும், ஆரம்பக் கலாசாலை (எலிமெண்டரி ஸ்கூல்) உபாத்தியாயர்கட்கு இந்த கில்டினுல் என்ன உதவிசெய்யலாம் என்பது குறித்துத் திருப்பத்தூர் திரு. பி. ஏ. சுப்பிரமணிய அய்யரும் பிரசங்கம் செய்வார்கள். ௩-மணிக்குச் சிற்றுண்டி யளிக்கப்படும். மூன்றரை மணிக்கு, எஸ். எஸ். எல். ஸி. போர்டு அமைப்பு, ஜில்லா ஸகிண்டரிக் கல்விபோர்டு அமைப்பு, பாடப் புத்தகக் கமிட்டியமைப்பு ஆகியவற்றின் மீதும், பஞ்சாயத்துப் போர்டு அமைக்க வேண்டுமென்பது குறித்தும், உபாத்தியாயர் பிராவிடண்ட் பண்டு (சேமநிதி)-க்குக் கட்டும் தொகைகளை அதிகப்படுத்துவது பற்றியும், பாடங்கள் தாய்ப் பாஷையில் கற்றுக்கொடுக்க வேண்டுமென்பது குறித்தும், உபாத்தியாயர் உடை குறித்தும், புதிய எஸ். எஸ். எல். ஸி. பாடத் திட்டம் பற்றியும், ஹைஸ்கூல்கள் மூலமாக உபாத்தியைப் பயிற்சி யளித்தல் பற்றியும் தீர்மானங்கள் ஆலோசிக்கப்படும். மாலை ஏழரை மணிக்குப் போஜனம் அளிக்கப்படும்.(௩)நிர்வாகக் கமிட்டியங்கத்தவர்கள் அன்று தினம் காலை எட்டரை மணிக்கே வந்துவிடுமாறு கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.(ச) எல்லா அங்கத்தவரும்மகாநாட்டுக்கு வந்து சேருமாறு மனப்பூர்வமாக வேண்டிக்கொள்ளப்படுகிறார்கள். மகாநாட்டுக்கு வரும் அங்கத்தவரெல்லாம், காரைக்குடி ஹைஸ்கூல் சங்கத்தின் விருந்தினராக ஏற்று உபசரிக்கப்படுவார்கள் என்று காரியதரிசிகளான திரு. ஏ. ராமானுஜ அய்யங்காரும்.திரு. கே. ஆர். சீனிவாச அய்யரும் அறிவிக்கிறார்கள்.

---

## ஓர் திருத்தம்.

சென்றவாரப்பத்திரிகையில் கச-ம்பக்கத்தில் ஓர்சம்பாவனை என்றதலைப்பின் கீழ்காவதுமாதம் கஉ என்றிருப்பதை ஆவணிமாதம் ௩கஉ என்று வாசிக்க.

காரியஸ்தர், ஊழியன் கம்பெனி.

---







## இலங்கைச் செய்தி.

கொழும்பு, சுக்கில புரட்டாசி ரு

### மார்க்கட் நிலவரம்.

| | |
|---|---|
| கொப்புரா | ரூ. சுடு, எடு |
| க்ருவாப்பட்டை | எஉ சதம் |
| தேங்காய் எண்ணை (வெள்ளை) | ரூ. சுக0 |
| ஷை (சாதா) | ரூ. ச0டு |
| ரப்பர் (கிரீப்) | ௫உ சதம் |
| (ஷீட்) | ௫கஇ சதம் |
| புது நடப்பு வட்டி (செப்டம்பர்) | 0-க0-௩ |

வியாழக்கிழமை கிரீப்புக்கு ௫க சதமும் ஷீட்டுக்கு ௫0இ சதமும் விலையிருந்தன.

### செட்டி நாட்டு வங்கி.

முன்னர் அறிவித்திருந்தபடி செப்டம்பர் கடு-ம் தேதி முதல் கொழும்பு சா. ராம. மு. அ. கடை சா. ராம. மு. ராம. ராம. கடை இரண்டும் ஒன்று சேர்க்கப்பட்டு, செட்டி நாட்டு வங்கி (Bank of Chettinad td) லிமிடெட் என்ற விலாசத்தோடு நடாத்தப்பட்டு வருகின்றது. பாங்க ஆரம்ப தினத்தன்று வழக்கப்படி தனவணிகர் அனுஷ்டித்து வரும் முறைப்படியே புதுக் கணக்கு எழுதப்பட்டது. வேறு எவ்வித மாறுதல்களும் இதுவரையில் காணப்படவில்லை.

### அரசமர வழக்கு.

அனுராதபுரம் பௌத்தர் கோவிலிலுள்ள புண்ணிய அரசமரத்தை ஜேம்ஸ் அப்பு என்ற ஒருவன் வெட்டிவிட்டான் என்பதற்காக அவன் கைது செய்யப்பட்டான் என்பதும் அரசமரத்தை வெட்டிய வழக்கு விசாரணையில் இருந்துவந்ததென்பதும், நண்பர்கள் அறிவார்கள். தற்போது இவ்வழக்கு இலங்கை உயர்தர நீதிமன்றத் தலைமை நீதிபதி திரு லயல் கிராண்ட், நீதிபதி டிரைபர்க், திரு ஆர். எல். பெரியரா என்பவர்கள் அடங்கிய ஓர் பஞ்சாயத்தால் விசாரிக்கப்பட்டது. ஜூலை ௩0-ம் தேதி நடைபெற்ற விசாரணையில், அம்மனிதனை டாக்டர்கள் பரிசோதனை செய்து பார்த்ததில் மிகுந்த அறிவினுல் ஏற்பட்ட ஒரு வகைப் பைத்தியம்—சித்தக் கலக்கம்—அடைந்திருக்கிறுன் என்று கூறியது ஒப்புக்கொள்ளப்பட்டது. இவ்வழக்குப்பற்றிய விசாரணைகளை நடாத்த நியமித்த பௌத்தர் கமிட்டியும் கலைக்கப்பட்டுவிட்டதாகவுந் தெரிகிறது. பொதுவாக, அரசமரம் வெட்டியதால் ஏற்பட்ட கலவரம் ஒருவாறு சமாதானமாக முடிவெய்தியது நமது நிருபர் எழுதுகிறுர்.

---

### சோக்கலிங்கம்புத்தூர்.

மணிவாசக மாணவர் சங்கத்தின் ஐந்தாவதாண்டு நிறைவு விழா:—இச்சங்கத்தின் ஐந்தாவதாண்டு நிறைவுவிழா நிகழும் சுக்கில ஆண்டு புரட்டாதித் திங்கள் கூ-ம் நாள் செவ்வாய்க்கிழமை மாலை நான்கு மணிக்குத் துவங்கி க0-ம் நாள் புதன்கிழமை காலை கூ-மணி முதல் இரவு எஇ-மணி வரையும் (உச,உடு—கூ—உக) சென்னை "நவசக்தி" ஆசிரியர் திருமிகு. திரு. வி. கல்யாணசுந்தர முதலியாரவர்கள் தலைமையில் பல அறிஞர்களின் சொற்பொழிவுகள் நடைபெறும். இவ்விழா வீ. மு. அன்னசத்திரத்தில் நடைபெறும் என்று அறிவிக்கப்படுகிறது.

---

### கழனிவாசலில் ஆதித்திராவிடர் கூட்டம்.

நாளிது புரட்டாசி மாதம் க0-ந்தேதி புதன்கிழமை (உடு-கூ-உக) இரவு எ-மணிக்கு ஆதித்திராவிடரின் ஓர் பொதுக்கூட்டம் நடைபெறும். அவ்வமயம் திருவாளர் கே. எல். சிங்காரவேலு அவர்கள் தலைமை வகிப்பார்கள். பலர் பேசுவார்கள். முக்கியமான பல தீர்மானங்கள் செய்யப்பெறும் என்று திரு. கு. குருசாமி அறிவிக்கிறுர்.

---

### தேவகோட்டை.

சரஸ்வதி வாசகசாலை ஆண்டு விழா:—இவ் வாசகசாலையின் நான்காவதாண்டு விழா இம்மதி உ0-ம் நாள் (ரு-க0-உகூ) சனிக்கிழமை பிற்பகலில், இந்நகர் திரு. செ. மு. லெ. நா. லெ. அவர்கள் (கண்டதேவி ரோடு) பங்களாவில் நடைபெறும். காரைக்குடி "ஊழியன்" ஆசிரியர் திரு. ராய. சொக்கலிங்கன் அவர்கள் தலைமை வகிப்பார்கள். பெரியார் பலரின் சொற்பொழிவுகள் நிகழும். அன்பர்களின் வரவைப் பெரிதும் எதிர்பார்க்கிறேம் எனக் காரியதரிசி அ. சுவாமிநாதன் அறிவிக்கிறுர்.

---



சுப்பிரமணியர் விஞ்சை. (விலை அணு க.)

மதுரை ஸ்ரீ மீனாட்சியம்மை அகவல். (விலை அணு க.)

ஆதித்ய ஹ்ருதய ஸ்தோத்திரம். (விலை குறிக்கவில்லை.)

பீஜாக்ஷர மாலிகை. (விலை அணு க.)

[வெளியிட்டோர்:ஸ்ரீசாதுரத்தின சற்குரு புத்தகசாலை, பார்க்டவுன், சென்னை.]

முன்னவை யிரண்டும் தமிழ்மொழியின. பின்னவையிரண்டும் வடமொழியின; தமிழ் எழுத்துக்களில் அச்சிடப்பட்டிருக்கின்றன.

### ஸ்ரீ ஷண்முகப்பெருமான் சதானந்த கீதம். (முதல் பாகம்)

[இயற்றி வெளியிட்டோர்: சாமி சோமசுந்தரம், கொட்டாம்பட்டி. விலை அணு ௫.]

டிம்மி க-க்கு அ அளவில் இருபது பக்கமுள்ள இச்சிறு புத்தகத்தில் பல மெட்டுக்களில் சுப்பிரமணியக்கடவுள் மீது தமிழ்க்கீர்த்தனைகள் சில அடங்கியிருக்கின்றன.

### பக்திரசத் தோத்திரத்திரட்டு.

[வெளியிட்டோர்: இந்துகலாபி விருத்திச் சங்கம், ௬௩, ஜிந்தும்பிட்டித் தெரு, கொழும்பு. விலை இல்லை.]

தேவார திருவாசக முதலியவற்றினின்றும் இனிய துதிப் பாக்கள் சில பொறுக்கி யெடுக்கப்பட்டு இதில் முறையே வைத்தளிக்கப்பட்டிருக்கின்றன.

### கதிர்காமத் திருப்புகழ்.

[வெளியிட்டோர்: இந்துகலாபி விருத்திச் சங்கம், ௬௩, ஜிந்தும்பிட்டித்தெரு, கொழும்பு. தபால் தலை அனுப்புவோருக்கு இலவசமாக அனுப்புவதாகஅறிவிக்கப்படுகிறது.]

அருணகிரிநாத சுவாமிகள் கதிர்காமக் கடவுளைப்பற்றிப் பாடிய திருப்புகழ்ப் பாக்கள் இச்சிறு புத்தகத்துள் அடங்கியிருக்கின்றன.

### கர்ப்பாட்சி அல்லது சுவாதீன கர்ப்பம்,

[வெளியிட்டோர்:— புலவர் புத்தகசாலையார், வேப்பேரி, மதராஸ். விலை அணு அ.]

கர்ப்பத்தடை செய்துகொள்ளும் செயற்கை முறைகள் இருபத்தியிரண்டு இச்சிறு புத்தகத்தில் விவரிக்கப்பட்டிருக்கின்றன.

### ஸ்ரீ மதுரையாண்டவன் பதிக பஜன ரஞ்சிதம்.

[இயற்றியவர்:சோமசுந்தரன். கிடைக்குமிடம்:பர்மாநாடு ஆபீஸ், உஉ௩, லூயிஸ்வீதி, ரங்கூன். விலை ரூ. 0-ச-0.]

பெயருக்கேற்பச் சில பாட்டுக்களும் விருத்தங்களும் மதுரைக் கடவுள்மீது இயன்றன இதில் அடங்கியிருக்கின்றன.

### முதுமொழிக்காஞ்சி (மூலமும் தெளிபொருள் விளக்கமும்)

[ஆசிரியர்:— தே. கிருஷ்ணசாமிப் பாவலர், வெளியிட்டோர்:— ஸ்ரீ சாது இரத்தினப் பத்தகசாலை, பார்க்டவுன் போஸ்ட், சென்னை. விலை அணு சு]

மூலமும், பதவுரையும், சில விசேஷக் குறிப்புக்களும் அடங்கியிருக்கின்றன.

### சிந்தாமணி விநாயகர் வெண்பா.

[ஆக்கியவரும் வெளியிட்டவரும்: திரு. முரு- நாராயணன் செட்டியார், ஆட்டுக்குளஞ் சேகரம் கணபதிபுரம், மேலூர்த் தாலுக்கா. விலை குறிப்பிடப்படவில்லை.]

விநாயகர் மீது வெண்பாவும், சண்முகன்மீது படைவீட்டு மாலையும், காவடிச் சிந்துமாகிய சில துதிப்பாக்களும் பாடல்களும் இதில் அடங்கியிருக்கின்றன.



# ம தி ப் பு ரை க ள் .

### ஸ்தோத்திர மஞ்சரி.

[வெளியிட்டோர்: ஸ்ரீ இலட்சுமி விலாச சங்கம், சவுங்கோம், அரையணுத் தபால் பில்லை யனுப்புவோர்க்கு இலவசமாக அனுப்புவதாகக் குறிக்கப்பட்டிருக்கின்றது]

இதில் தேவார திருவாசக முதலியவற்றினின்றும், தாயுமானுர், சேந்தனுர், கருவூர்த் தேவர் முதலிய சிவ பக்தர் பாக்களினின்றும் பல இனிய உருக்கமான துதிக்கவிகள் எடுத்தளிக்கப்பட்டிருக்கின்றன.

### ஸத்குரு ஸ்துதி.

[இயற்றியவர்:வேங்கடநாராயண சாஸ்திரியார். சொத்தமங்கலம் பக்தகேசரி ராம. அரு. வெ. பெத்தாச்சி செட்டியாரவர்கள் உதவியால்பிரசுரிக்கப்பட்டிருக்கிறது.வெளியிட்டோர்:எஸ். கிருஷ்ணசாமி அண்டுகோ, தெப்பக்குளம், திருச்சி.அரையணு ஸ்டாம்பு அனுப்புவோருக்கு ஒரு பிரதி இலவசமாக அனுப்பப்படுமென அறிவிக்கப்படுகிறது.]

நிலாவுமடம் ஸ்ரீநரசிம்ம பாரதிஸ்வாமிகள்மேல் இயற்றப்பட்டவடமொழி, தமிழ்மொழிக் கவிகள் அடங்கியிருக்கின்றன.

### மந்திர மகிமை.

[ஆசிரியர்:— பண்டித மதன் மோகன் மாளவீய. வெளியிட்டோர்:— இந்திப் பிரசார சபை, கக௩, ஹைரோடு, திருவல்லிக்கேணி, சென்னை. விலை அணு உ.]

இந்திப் 'பிரசார சபையால் இஃது தமிழில் மொழி பெயர்த்து வெளியிடப்பட்டிருக்கிறது. பற்பல புராணங்களிலுள்ள சுலோகங்களை ஆதாரமாக வைத்துக்கொண்டு, மந்திரத்தினுல் ஈசனைத் தொழலாம் என்று முடிவு கட்டப்பட்டிருக்கிறது.

### ஸ்ரீ ராமகிருஷ்ண சரிதம்.

[ஆசிரியர்:ஸ்ரீ சித்பவானந்த சுவாமிகள். வெளியிட்டோர்:ஸ்ரீராம கிருஷ்ணமடம், சென்னை. விலை அணு அ.]

அழகிய சொற்கள்; ஆற்றொழுக்குப் போன்ற நடை. சிற்சில விடங்களில் மிகைபடுத்தப்பட்டிருக்கும் போல் காணப்படுகிறது. எனினும், பரமஹம்சரின் பரவச பக்தியும், மேலான ஞானமும் புலப்படத்தக்கவாறு பல இடங்கள் அமைந்திருக்கின்றன.

### மதுமானிடக் கும்மி.

[ஆசிரியரும் வெளியிட்டோரும்:—யாழ்ப்பாணம் வண்ணைநகர் செ. வை. செல்லையா, தலைமை ஆசிரியர்,திருவள்ளுவர் கலாசாலை, ஈப்போ.]

இப்புத்தகம் இலவசமாக வழங்குப்படுகின்றதென்பதற்குச் சந்தோஷிக்கிறேம். மது பானத்தால் வரக்கூடிய தீமைகளை மிக அழகாகச் சித்திரம் செய்து, கும்மிப் பாடல்களாக ஆசிரியர் இயற்றியிருக்கின்றுர். மிக நல்ல காகிதத்தில் பிழையற அச்சிடப்பட்டிருக்கிறது. நடையும் முடுக்காகவும், நயமாகவும் இருக்கின்றது. சொற்களும் மிகப் பொருத்தமாக அமைந்திருக்கின்றன.

### சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம்.

[வெளியிட்டோர்:— சைவ சித்தாந்த மகாசமாஜம், கடு0, கோவிந்தப்ப நாயக்கன் தெரு, சென்னை. விலை அணு நான்கு]

சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிய தேவாரப் பதிகங்கள் ஏழாந் திருமுறையின், சுத்தமான பதிப்பு. மிக நல்ல கடிதத்தில், மிகவும் திருத்தமாகப் பதிக்கப்பட்டிருக்கிறது. சமாஜத்தாரின் நோக்கம் தேவாரத்தைக் குறைந்த விலைக்கு விற்கக்கூடிய பதிப்பை வெளியிடவேண்டுமென்பதென முகவுரையினின்றும் தெரிகிறது. இப்புத்தகத்தின் அளவையும், பதிப்பின் சிறப்பையும் நோக்க, இதன் விலை மிகக் குறைவாகவிருப்பது குறிப்பிடத்தக்கது. ஆங்கிலத்தில் இப்படித்தான், பழய உயர் நூல்களைப் பல மலிவான பதிப்புக்களாக வெளியிடுவது வழக்கம். எனவே, இதுவோர் நல்ல தொண்டாகும்.

### கோவில் எதற்கு?

(ஆசிரியர் பண்டித மாளவியா)

### கோவிலை இடிப்பதா கொண்டு திருத்துவதா ?

### இராமாயணப் போராட்டம்.

(ஆசிரியர்: திரு. பொ. மீனுட்சிசுந்தரம் பிள்ளை, எம். ஏ., பி. எல்.)

### வேசிமக்கள் யார்?

### திருஞானசம்பந்தர் கொலைபாதகரா ?

(ஆசிரியர்: தெ. கிருஷ்ணசாமிப்பாவலர்.)

[இவ்வைந்தும் வெளியிட்டோர்: ஸ்ரீ சாது இரத்தின சற்குரு புத்தகசாலை, பார்க்டவுன், சென்னை. விலை முறையே அணு உ, அணு க, அணு க, அணு க, அணு உ.]

சுயமரியாதை இயக்கத்தாரது சில அபிப்பிராயங்கட்குக் கண்டனமாக இவை வெளியிடப்பட்டிருக்கின்றன.

### பிரஸவ காலத்தில் செய்யவேண்டிய முதல் உதவி.

[ஆசிரியர்:— ஹானரபிள் டாக்டர் யூ. ராமராவ். வெளியிட்டோர்:— ஸ்ரீ கிருஷ்ணன் பிரதர்ஸ் கஉக௩ நி-ர்., தம்புச்செட்டி தெரு, சென்னை. விலை அணு சு]

முதலில் சரீர அமைப்பப்பற்றியும், அங்கங்களைப்பற்றியும் சுருக்கமாகக் கூறிவிட்டு, கர்ப்பகால உணவு, உடை, ஓய்வு முதலியவை குறித்தும், மசக்கை, சில நோய்கள், கர்ப்பகால விபத்துக்கள், முதலியவை பற்றியும், விபத்துக்களைத் தடுக்கும் வகைகளும், சுகப் பிரசவம் யாது என்பதும், பிரசவக் குறிகள் முதலியனவும், கஷ்டப் பிரசவம் யாது என்பதும், குழந்தையின் பாதுகாப்பும் பதினுன்கு அத்தியாயத்தின் கீழ், இச்சிறு நூலில் சுருங்கவும் விளங்கவும் விவரிக்கப்பட்டிருக்கின்றன. மிகவும் உபயோகமுள்ள புத்தகம்.

### சுகோதயம்.

[பத்திராசிரியர்:வி. என். ரங்கசாமி அய்யங்கார். வெளியிடுவோர்:சுகோதயம் கம்பெனி லிமிடெட், ஆரணி. வருடச்சந்தா உள்நாட்டுக்கு ரூ. ௩-அ-0; வெளிநாட்டுக்கு ரூ. ௫-0-0.]

இடையில் நின்றிருந்த 'சுகோதயம்' மறுபடியும் புத்துயிர் பெற்று, அதிகப் பக்கங்களுடன், வெளிவரத் துவங்கியுள்ளது. "சுகோதயம்" வாரபத்திரிகையையோ, அதன் ஆசிரியர் திரு. வி. என். ரங்கசாமி அய்யங்காரையோ தமிழ் நாட்டவர்க்கு நாம் அறிமுகம் செய்துவைக்கத் தேவையில்லை. 'சுகோதயம்' சீரிய கொள்கையுடனும், நல்ல அரசியல் நோக்குடனும், நடுநிலைமையுடனும் தனது கருத்துக்களை வெளியிட்டு, நாட்டுக்குத் தொண்டுபுரியும் என்பதில் ஐயமில்லை. புத்துயிர்பெற்ற 'சுகோதயம்' நீடுவாழ்க!

### விமோசனம்.

[ஆசிரியரும் வெளியிடுவோரும்: சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார்,புதுப்பாளையம் காந்தி ஆச்சிரமம், திருச்செங்கோடு, வருஷச்சந்தா ரூ. க-0-0.]

மதுவிலக்குப் பிரசாரத்தை முக்கிய நோக்கமாகக் கொண்ட ஓர் மாதப் பத்திரிகை.தேசபக்தரும், நமது அரிய அரசியல் தலைவர்களுள் ஒருவரும், காந்தியடிகளின் முக்கிய சீடருள் ஒருவருமான சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியாரை ஆசிரியராகக்கொண்ட இப்பத்திரிகை மிகவும் அரிய பொருள்களும், புள்ளி விவரங்களும் அடங்கிய கட்டுரைகள் நிறைந்திருக்கின்றது. பல இனிய கதைகளும்இதில் வெளிவருகின்றன. வேடிக்கையானவும், அறிவு புகட்டத்தக்கவையுமான படங்களும் சில வெளிவருகின்றன. பொதுவாக இத் தமிழ் நாட்டவர் யாவரும் அன்போடு ஆதரிக்கவேண்டிய ஒரு பத்திரிகையாகும். "விமோசனம்," மது விலக்கும் பிடியினின்றும் இந்தியஅன்னை விமோசனம் பெறுங்காரியத்தில் தனது பங்கு அநுவலத் திறமையுடன் ஆற்றும் என்பதில் நமக்கு முழுநம்பிக்கையுமுண்டு.

### இந்திப் பிரசாரக் (மாணவர் இதழ்.)

[ஆசிரியர்கள்:— ஆங்கிலப் பகுதிக்கு திரு. டபிள்யூ. பி. இந்னேஷலாம் இந்திப் பகுதிக்கு திரு. மோடூரி ஸத்திய நாராயணரும், வெளியிடுவோர். இந்திப் பிரசார சபையார், திருவல்லிக்கேணி, சென்னை. வருஷச் சந்தா ரூ உ—0—0, தனிப் பிரதி இம்மாதத்தியது அணு ச.]

இந்தியின் முன்னேற்றம் கருதி உழைக்கும் இம்மாதப் பத்திரிகையின் ஜூலை மாத இதழ், சில விசேஷ அம்சங்களுடன் மாணவர் இதழென வெளியிடப்பட்டுள்ளது. இந்தி வளர்ச்சி சம்பந்தமான பல குறிப்புக்களும், இந்தியின் அவசியத்தையும் வளர்ச்சியையும் பற்றிய கட்டுரைகளும் பல இதில் அடங்கியிருக்கின்றன. ஸரோஜினி தேவி, ஆன்டிருஸ் துரைமகனர் ஆகிய இருவரதும் ஆப்டோன் படங்கள் தனித்தனி ஒரு ஆர்ட் காகிதத்தின் இருபுறத்தும் பதித்துச் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இந்தியின் அவசியத்தை விளக்கும் சில விகடச் சித்திரங்களும் இடையிடையே சேர்க்கப்பட்டிருக்கின்றன.

---

## நோட்டீஸ்.

தேவகோட்டை டி. மு. கோர்ட்டு.

O. P. 15 of 1929.

1. தெய்வானை ஆச்சி
2. சிகப்பி ஆச்சி
3. லெக்ஷிமி ஆச்சி
4. வள்ளியம்மை ஆச்சி

} மனுதாரர்கள்.

மெய்யப்பசெட்டியார்—எதிர்மனுதார்.

ஷை 1, 2, 3, 4 மனுதாரர்களின் தாயார் லேட் அலமேலு ஆச்சிக்கு காரைக்குடி ஆவி. ப. பழனியப்ப செட்டியார் கொடுக்கவேண்டிய சிவகெங்கை சப் கோர்ட் O. S. No: 102 of 1920-ல் பெற்றிருக்கும் டிக்கிரித் தொகையை வசூல் செய்ய ஷை அலமேலு ஆச்சி இறந்துவிட்டதால், மனுதார்களே ஷையாருக்கு வார்சுகளென்று அங்கீகரித்தும் வார்சு சர்ட்டிபிகேட்டு கொடுக்கவேணுமாய் கோரி மனுதார்களால் மனுச் செய்யப்பட்டு 26—9—29-உ வாயிதா ஏன்பட்டிருப்பதில் யாரொருவருக்காவது ஆக்ஷேபனைகள் இருக்கும் பக்ஷத்தில் ஷை வாயிதாவில் வந்து தெரிவித்துக்கொள்ள வேண்டியது.

R. Somasundaram Iyer,
Vakil.

# முனிசிபல் நிர்வாகம். (உ)

## ரஸ்தா, வெளிச்ச வசதி, கல்வி.

( டாக்டர் எஸ். சுப்பிரமணிய அய்யர். )

### சபை அமைப்பு.

முனிசிபல் நிர்வாகத்தில், எத்தகைய இலட்சியத்தை முனிசிபல் கௌன்சில் வைத்துக்கொள்ளவேண்டும்? குறிப்பிட்ட முனிசிபாலிடியின் ஜனங்களுடைய நிலைமைகளை, முனிசிபல் சபையாருக்கு இஷ்டமிருந்தால், அபிவிருத்தி செய்யக் கூடியதெப்படி? இவற்றை எனது சென்ற கட்டுரையில் குறிப்பாக எடுத்துக் கூறியிருக்கிறேன். பொதுவாக நமது முனிசிபல் சபைகளில் பின்வரும் நான்கு வகை ஜனங்கள் இருக்கிறார்கள்:—

(க) ஜனங்களுக்கு நன்மை செய்யவேண்டுமென்ற உண்மையான நோக்கத்துடன் சபைக்குள் செல்லுபவர்கள்;

(உ) தன்னய நோக்கத்துடன், சர்க்கார் தயவைச் சம்பாதிக்கவும், செல்வாக்குத் தேடிக்கொள்ளவும் முனிசிபல் சபைக்குள் நுழைவோர்; இவர்கள் தங்கள் தன்னய நோக்கங்களைப் பூர்த்தி செய்துகொள்ளுவதற்காக, தங்களுக்குத் தோன்றிய வழியில் ஜனங்களுக்கு நன்மை செய்வார்கள்;

(௩) தங்கள் எதிரிகளுக்குப் போட்டியாக, அவர்களுக்கு இளைக்கலாகாது என்று உள் நுழைய முயலுவோர்;

(௪) நியமனம் செய்யப்பெற்ற அங்கத்தவர்.

முதல் இரண்டு வகையாரால் பாதகமில்லை. மூன்றும் வகையாரால்தான் தீமை ஏற்படுகிறது. எப்பொழுதும் அவர்கள் முற்போக்குக்கு இடறு கட்டையாக விருக்கிறார்கள். மூன்றும்வகையைச் சேர்ந்தநமது நண்பர்,தமது எதிரியாயிருக்கும் ஒருவராலோ அல்லது தம்மைப்போலவே யோசனையுடையவராயில்லாத ஒருவராலோ, ஏதாவது சீர்திருத்தமான அல்லது முற்போக்கான தீர்மானம் ஒன்றைக் கொண்டுவந்தால், அதனை உயிரோடு புதைத்துவிட முயலுகிறார். இது அதன் தகுதியை நோக்கியல்ல; தமது மனோபாவத்துக்கு இசையாதவரால் அது கொண்டுவரப்பட்டு விட்டது என்ற ஒன்றிற்காகவே.

தற்பொழுது,சட்டம்எவ்வாறிருக்கிறதோ அவ்வாறே அது எதுவரையிலிருந்து வருகிறதோ அதுவரையில், நான்காவது வகுப்பாரை விலக்கமுடியாது. அவர்களை எவரும் தங்கள் கட்சிக்குப் பயன்படுத்திக்கொள்ளலாம்.

இந்த விஷயங்களைச் சொல்லியான பின்னர், தனது ஒருவருஷ வாழ்வினால், நமது முனிஸிபாடி நமக்குச் செய்துள்ள நன்மை என்ன வென்பதைப் பார்க்கலாம். இந்தக் காலத்தில், சர்க்கார் உத்தியோகஸ்தரான (அபிஷியல்) சேர்மனின் கீழ் அது இருந்து வந்திருக்கிறது. பொது ஜனங்களின் நோக்கில், ஒரு உத்தியோகஸ்தரான சேர்மன் காலத்தில்அபிவிருத்திகள் எதுவும் ஏற்படாவிட்டால், தேர்ந்தெடுக்கப்பட்ட சேர்மன் காலத்தில் அதிகம் எதிர்பார்க்க முடியாது.

௧௯௨௮-௧௯௨௯-ம் வருடத்திய நிர்வாக அறிக்கை படிப்பதற்கு உருசியாகவில்லை. இக்காலத்தில் சாதித்ததென்ன என்பதைக் குறித்து அதில் ஒன்றும் குறிப்பிடப்படக் காணோம். வருங்காலத்தில் இன்னின்ன செய்யப்படலாம் என்று சாதுவான நம்பிக்கைகள் அதில் தெரிவிக்கப்பட்டிருக்கின்றன; உயர்தரமான யோசனைகள் கூறப்பட்டிருக்கின்றன. சாதாரணமான ஒரு மனிதனதுநோக்கில், இனிமேல்தான் அவை பயன்தரவேண்டியவையாயிருக்கின்றன.வரிகளும்வருமானங்களும்பின்னால்ஏராளமாகப் பெருகியிருந்தும், நகரம் யூனியனாயிருந்த காலத்திற்குப் பின்னால் எவ்வித அபிவிருத்தியும் செய்யப்படவேயில்லை.

### ரஸ்தாக்கள்.

சில நாளைக்கு முன் நான் எனது நண்பரொருவருடன் பேசிக்கொண்டிருந்தேன். அவர் ஒரு உயர்ந்த அரசாங்க உத்தியோகஸ்தர். நமது முனிசிபல் ரஸ்தாக்கள் யாவற்றிலும், சிறுசிறு குழிகளே நிறைந்திருக்கின்றன என்று அவர் என்னிடம் கூறினார். ரஸ்தாக்கள் மிகச் சீர்கேடாகவே யிருந்து வருகின்றன. சென்ற ஒரு வருடத்தில், அவை சீர் செய்யப்படவேயில்லை. முனிசிபாலிடியார் இப்பொழுதுதான் தங்கள் பொறுப்பை யுணர்ந்து விழித்துக்கொண்டிருக்கிறார்கள். சென்ற ஒரு மாதத்திற்குள் தான், முனிஸிபாடியார் ரஸ்தாக்களைக் கவனிக்கத் துவங்கியுள்ளார்கள்; அதுவும், பொதுஜனங்கள் மிருந்த கிளர்ச்சி செய்த பிறகு.

மேலும், தெருக்களை எப்படித் தண்ணீர் தெளித்துக் கூட்டிச் சுத்தம் செய்யவேண்டுமோ அவ்வாறு சுத்தம் செய்யவில்லை. தெருக்களுக்குத் தண்ணீர் தெளிக்கத் தண்ணீர் கிடைக்கவில்லை என்று அவர்கள்வாதிக்கக்கூடுமென்று எனக்குத்தெரியும். ஆனால், தெருக்களைச் சுத்தம்செய்து, கூட்டுவதற்கு மனிதர்கள் கிடைக்கவில்லை என்று அவர்கள் கூற முடியாதென்பது நிச்சயம். சுங்கச் சாவடியால் கிடைக்கும்வரிகள் ரஸ்தாக்களுக்கும் சாக்கடைகளுக்கும் செலவழிக்கப்படவேண்டியதாகும்.

### வெளிச்ச வசதி.

இந்த முனிசிபாலிடியில் கவுன்ஸிலர்கட்க்கு மட்டும்தான் வெளிச்ச வசதிக்குப் பாத்தியமுண்டுபோல் காணப்படுகிறது. அவர்களில் பெரும்பாலானவர் வீட்டுவாசலில் முனிசிபல் செலவில் 'கியாஸ்லைட்' போடப்பட்டிருக்கிறது. நமது தெருக்களிலும், அவர்களுடைய தெருக்களில் போலவே, 'லைட்'கள் நன்றாகப் போடப்படவேண்டும் என்றே கேட்கிறோம். நான் வசிக்கும் தொகுதி (வார்டு) நகரத்தின் ஒருமூலையிலிருக்கிறது; சந்தேகப்படக்கூடிய பேர்வழிகள் சில சமயம் வரக்கூடிய விடமாகவுமிருக்கிறது. என்றாலும், அந்தத் தொகுதியில் ஒரு 'கியாஸ்லைட்' கூட இல்லை. தமது சகாக்களிற்பெரும்பாலாரையும் விட முனிசிபல், லோகல்போர்டு காரியங்களில் அதிகமான அனுபவம் வாய்ந்த புதிய சேர்மன் இந்த விஷயங்களை நேரிலேயே கவனிப்பாரென நான் நம்புகிறேன்.

### கல்வி.

இந்த முனிசிபாலிடி ஜனங்களின் கல்வி மிகப் பிற்போக்கானதாயிருக்கிறது. சென்ற முனிசிபல் நிர்வாக அறிக்கை கூறுவதாவது:—"இந்த முனிசிபல் எல்லைக்குள் பள்ளிக்கூடம் செல்லும் வயது வந்த ஆண் குழந்தைகள் ௮௬௪; பெண்கள் ௬௨௬. இவர்களுள் ௪௬௦ ஆண்குழந்தைகட்கும் ௭௮௫ பெண் குழந்தைகட்கும் கல்வியளிக்கப்படவில்லை." இந்தப் புள்ளி விவரங்கள் சரியானவையல்ல என்று நான் நிச்சயமாகக் கருதுகிறேன். எப்படியிருந்தலும்சரி; இந்தப் புள்ளிகளே மிகவும் பழிப்புக்கிடனானவையாகும். தனது எல்லைக்குள் உள்ள குழந்தைகளுக்கு ஆரம்பக் கல்வியாவது அளிக்கவேண்டியது ஓர் முனிசிபாலிடியின் கடமையாகும். நம்முடைய முனிசிபாலிட்டியைப் போன்ற பணம் செழித்த முனிசிபாலிட்டி, கட்டாயக் கல்வி முறையை ஏற்படுத்தக் கூடியதாகும். தங்கள் கையெழுத்துக்கூட இடத்தெரியாத நல்ல செல்வர்களான அநேகம் பெண்மணிகளையும் ஆடவர்களையும் எனக்கு நேரே தெரியும். கல்வி விஷயத்தை முனிசிபாலிட்டி உடனே கவனிக்குமென நான் நம்புகிறேன். ஒவ்வொரு தொகுதிக்கும் ஒன்றாகவாவது இரண்டு மூன்று தொகுதிகளுக்கு ஒன்றாகவாவது ஒவ்வொரு ஆரம்பக் கலாசாலை யிருக்கவேண்டும். டிரெயினிங் (உபாத்திமைப் பயிற்சி) பெற்ற உபாத்தியாயர் அவற்றில் நியமிக்கப்படவேண்டும். அவர் குழந்தைகட்குச் சுகாதாரத்தையும் நற் பழக்கங்களையும் போதிக்கக்கூடியவராகவும் இருக்க வேண்டும். இப்பொழுது ஏறக்குறைய நூற்றுக்கு ௬௦-ஆண் குழந்தைகளும், நூற்றுக்கு ௮௫ பெண்குழந்தைகளும் படிக்கவேயில்லை யெனக் காண்கிறோம். சீர்திருத்தம் பற்றிய எல்லாப்பேச்சுக்களுக்கும் முன்தாகக் கல்வி யபிவிருத்தி யேற்படவேண்டும். ஒரு ஹைஸ்கூலைச் சொந்தத்தில் வைத்துச் சென்ற பத்தாண்டுகளாக நடத்திவரும் நமது புதியசேர்மன் இந்த நோக்கத்தை யுத்தேசித்தாவது, இலவசமான கட்டாய ஆரம்பக் கல்விமுறையைநமதுமுனிசிபாலிடியில் ஏற்படுத்தி, நமது கல்வித் தேவைகளைப் பூர்த்தி செய்வார் என்று நான் நம்புகிறேன். இந்த வேலையை மிகுந்த ஊக்கத்துடன் அவர் கவனிப்பாரானால், வருங்காலத்து முனிசிபாலிடியின் ஓட்டர்கள் கல்வி வாய்ந்தவர்களாகிவிடுவார்கள். தங்களுக்கு வேண்டிய தேவைகள் யாவை யென்பதும், தங்கள் தேவைகளைக் கவனிக்க எத்தகைய மனிதரை முனிசிபல் சபைக்குள் அனுப்ப வேண்டுமென்பதும் அவர்களுக்குத் தெரியும். இதனால், வருங்காலத்தில் செய்யவேண்டிய முனிசிபல் சீர்திருத்தங்களெல்லாம் தாமே ஏற்படும்.

ஓர் ஆதித்திராவிடப் பாடசாலை திறக்கப்பட்டிருப்பதாகவும், வாச வசதியுடையதாக (ரெஸிடென்ஷியல்) அது அபிவிருத்தி செய்யப்படப் போவதாகவும் முனிசிபல் நிர்வாக அறிக்கை கூறுகிறது. அதுஓர் உதாரணமாக விளங்கத்தக்க கலாசாலையாக ஆகுமென்று நான் நம்புகிறேன். உணவின்றியும், உடையின்றியும், நோய் வாய்ப்பட்டும் கஷ்டப்படும் ஏழைக் குழந்தைகளுக்கு அதில் உணவும், உடையும், வைத்திய உதவியும் அளிக்கப்படும் என்றும், ஜாதி வேற்றுமை உணர்ச்சிகளில்லாதவரும் தாழ்த்தப்பட்ட வகுப்புக் குழந்தைகளை உயர்த்துவதில் உண்மையான சிரத்தையுடையவருமான உபாத்தியாயர்கள் அதனைக் கவனித்து வருவாரென்றும் நம்புகிறேன். தச்சுவேலை, ஜமுக்காள நெசவு முதலிய கைத்தொழிற் கல்வியும் பையன்கட்குப் போதித்தல் வேண்டும். இதனால், அவர்கள் கலாசாலையை விட்டு வெளியே செல்லும்பொழுது தங்கள் ஜீவனத்திற்குத் தாங்களே உழைத்துச் சம்பாதிக்கக்கூடியவர்களாயிருப்பார்கள்.

---

### கோ. லெட்சுமிபுரம்.

ஓர் பொதுக் கூட்டம்:—இவ்வூர் சொக்கலிங்க வித்தியாசாலைக் கட்டிடத்தில் ௧௧—௯—௨௯-ம் தேதியன்று காலை ௧௧-மணிக்கு திரு எம். பி. ஏ. ஆர் சுப்பிரமணியன் செட்டியார் அவர்கள் தலைமையில் கூடியது. திரு ந. சொ. அருணாசலன் அவர்கள், உயர்திரு. ஹரிவிலாஸ சாரதா அவர்களின் மசோதாவைச் சட்டமாக்க வேண்டு வேண்டுமென கேட்டுக் கொள்ளுகிறது என்ற பிரரேபனையைப்பிரரேபித்தார். நாகர்கோவில் திரு. ஆர் பத்மனாபன் அவர்களும், கொத்தமங்கலம் திரு ராம. சுப்பிரமணியன் அவர்களும் ஆதரித்துப் பேசினார்கள் பின்னர் ஓட்டுக்கு விடப்பட்டு தீர்மானம் நிறைவேறியது. மேற்படி தீர்மானத்தை இந்தியச் சட்டசபை அங்கத்தினர் திரு ஆர். கே. ஷண்முகஞ் செட்டியார் அவர்கட்கு அறிவிக்கப் பெற்றது.

பாரதியார் தினம்:—இவ்வூர் சொக்கலிங்க வித்தியாசாலையில் ௧௧-தேதியன்று கொண்டாட்டம் நடைபெற்றது. திருவாளர்களான ந. சொ. அருணாசலன் அவர்களும் ராம. ராமநாதன் அவர்களும் ராம. சுப்பிரமணியன் அவர்களும் சொற்பெருக்கிட்டார்கள்.

பந்தய விளையாட்டு:— தனவைசிய நாட்டு, தேசீயஆரம்பப் பள்ளிக்கூடப்பந்தய விளையாட்டிற்காக சொக்கலிங்க வித்தியாசாலை மாணவ மாணவிகள் பயின்று வருகின்றார்கள் என்று ஓர் நிருபர் எழுதுகிறார்.

---







# லாலாஜீயின் தற்சரிதம்.

" மஸ்ஸினி எனது குரு."

லாலாஜீயின் தற்சரிதம் "பீபிள்" பத்திரிகையில் வெளியாகி வருகிறது. அதன் முன் தொடர்ச்சி வருமாறு:—

எனது கலாசாலைப் படிப்புப் பதினாறும் வயதில் பூர்த்தியானதும்,லாகூருக்கு வந்து சேர்ந்தேன். அங்கே, நான் பிரம்மசமாஜக் கூட்டங்களுக்குச் செல்லத் துவங்கினேன். அதனால் மெல்லமெல்ல, இந்துமதத்தில் என் மனம் திரும்பியது. இந்துக்கள் புகழ்ந்து பேசப்படுவதைக் கேட்பதில் விருப்பம் உண்டாகத் தொடங்கியது. பிரம்ம சமாஜ இலக்கியம் இந்து மதத்தை மகிமைப்படுத்த வில்லையாயினும், அதில் இந்துத் தேசீயம் மணங்கமழாமலில்லை. ஆங்கிலேயரிடமும் அவர்களது நாகரிகத்திலும்,பிரம்ம சமாஜக்காரர்களுக்குப் பெரிதும் மோகம். என்றாலும், இஸ்லாத்தை ஒப்பிட்டுப் பார்க்கும் பொழுது, புராதன இந்துமதத்தினிடம் அவர்களுக்கு ஓர் மதிப்பு இருந்துவந்தது. சமஸ்கிருதத்திலும் இந்தியிலும் அவர்கட்குப் பக்தியுண்டு. உருது, இந்திச் சண்டையில், இந்தியை அவர்கள் ஆதரித்தார்கள்.

இந்துத் தேசீயம் வேண்டும் என்பதற்கு முதலாம் படிப்பினையை எனக்குக் கற்றுக் கொடுத்தது இந்தி உருது விவாதமாகும். இந்தச் சமயம் என் மனத்தில் ஓர் மாறுதல் ஏற்பட்டது. இதிலிருந்து பின்னால் ஒரு பொழுதும் பின் திரும்பியதேயில்லை. இளமைப் பழக்கமும், பெற்றோர் போதித்த கல்வியும் உருதுவுக்கு எனது ஆதரவை அளிக்கச் செய்திருக்கவேண்டும். அதில் என் சொந்தசம்பந்தப்பட்டமட்டில் லாபமுண்டு. ஏனெனில், பாரசீகம் கற்பதில் பல ஆண்டுகளைக் கழித்திருந்தேன்; உருது இலக்கியத்தில் நல்லபரிச்சயம்பெற்றிருந்தேன்;ஆனால், இந்தியிலோ, அதன் எழுத்துக்கள் கூடத் தெரியாது. ஆனால், அரசியல் ஒற்றுமைக்கு இந்தியும் தேவநாகரமும் பரவவேண்டும் என்ற நிச்சயம் எனக்கு உண்டாகிவிட்டதால், சொந்த நலன்களை யெல்லாம் கருதாதொதுக்கி, இந்திக்காகப் பிரசாரம் செய்யத் துவங்கினேன்.

இந்திப் பிரசார சம்பந்தமாக அம்பாலா சென்று, அங்கு இந்தியை ஆதரித்தும் உருதுவை எதிர்த்தும் பொதுக்கூட்டமொன்றில் பிரசங்கம் செய்தேன். அப்பொழுது உண்மையிலே எனக்கு இந்தியின் எழுத்துக்கள் கூடத் தெரியாது.டில்லியைச் சேர்ந்த காலஞ்சென்ற ராய் ஹுகும் சந்த், எம். ஏ., கூட்டத்திற்கு வந்திருந்தார். அவருக்கு ஆங்கிலத்தில் நல்ல புலமைஉண்டு. அதோடு, அவர் உருதுவைத் தாய்மொழியாகக் கருதி, அதனைப் போற்றிவந்தவர். எனது பிரசங்கத்தைப் பாராட்டி அவர் ஓர் பத்திரிகையில் எழுதினர். ஆனால், அதில் எனது இந்திஅறிவைப் பெரிதும் பரிகாசம் செய்திருந்தார். டில்லிக்கு நான் திரும்பியவுடனே, இந்தி எழுத்துக்களைக் கற்றுக் கொண்டதுடன், பாரசீகத்தையும் அரபியையும் படிப்பதை நிறுத்திவிட்டேன்.

கல்லூரியில், நான் பாரசீகமும் அரபியும் எடுத்துக் கொண்டு, இவற்றை மௌல்வி மகம்மது ஹுஸேனுடன் படித்துக் கொண்டிருந்தேன். இந்தியை ஆதரிக்கும் கட்சியினரை ஒருநாள், வகுப்பறையில், மௌல்வி சாகிப் பரிகாசம் செய்யத்துவங்கினார். இந்தியை வங்காளிகள் ஆதரிப்பதைப் பரிகாசம் செய்கையில், அவர்கள் அந்நியராகையால் இந்த மாகாணத்தின் விவகாரங்களில் அவர்கள் தலையிட உரிமையில்லையென்று இவர் கூறினார். காலஞ்சென்ற மௌல்வி சாகிப் மத நம்பிக்கையில் ஷியா. இரானைப் பற்றி நிறையப் புகழ்வார். தமது சொந்த நாடே இரானுக்கு உரியதென்றும், இரான்மயமாகப் போக எப்பொழுதும் ஆசைப்பட்டுக்கொண்டிருக்கிறதென்றும் அவர் கூறுவார். அவர் வங்காளிகளைப்பழித்த பொழுது, நான் சிறிதும்தயக்கமின்றி, எப்படியாயினும்வங்காளிகள் இந்தியர்களே யென்றும், அவர்களுக்குப் பஞ்சாப்பின் விவகாரங்களில் தலையிட உரிமையில்லையாயின் தம்மை இரானியரென்று சொல்லிக் கொள்ளும் மௌல்வி சாகிப்புக்கு அவற்றில் தலையிட என்ன உரிமையுண்டு என்றும் பதிலுக்குக் கண்டித்தேன். மௌல்வி சாகிப்புக்கு வருத்தம் உண்டாயிற்று. ஆனால். (டில்லியாட்களைத் தவிர) வகுப்பிலிருந்த எல்லா மாணவர்கட்கும் என்னிடம் ஆதரவிருந்தது; ஆதலால் அவர் வாளாவிருக்க வேண்டியதாயிற்று. எனக்குத் தேக அசௌக்கியம் உண்டானதாலும், கல்லூரிப்படிப்போடு கூடவே சட்டப்படிப்புப் படித்துக் கொண்டிருந்ததாலும், கலைகள் (ஆர்ட்ஸ்) பாடங்களில் அதிகச் சிரத்தையெடுத்துக் கொள்ளாமல், பாரசீக அரபிச் சொற்பொழிவுகள் நடக்கும் பொழுது அடிக்கடி நான் ஆஜராகாதிருந்துவந்தேன். இப்பொழுது,மௌல்வி சாகிப் என்னைப்பற்றிப் புகார் செய்யலானார். இதனால், நான் அம்பாலாவிலிருந்து திரும்பிவந்ததும், தலைமை ஆசிரியர் (பிரின்ஸிபால்) திரு. சீம் என்னைக் கூப்பிட்டு, கோபித்துக் கொண்டார். இதன் பயனாக, பாரசீகத்தையும் அரபியையும் நான் முற்றிலும் விட்டுவிட்டேன்.

குருதத்தர் என்னை ஒரு சமஸ்கிருதப் புரொபஸரிடம்—பண்டித பகவான் தாஸிடம்—அழைத்துச் சென்று, அவருக்கு ஓர் புதிய மாணவன் அகப்பட்டதாக அறிவித்தார். அந்த நாளில், மாணவர்கள் சமஸ்கிருதம் எடுத்துக் கொள்ளுவது அபூர்வம்—என்றாலும், அந்தக் குறிப்பிட்டவருடத்தில் அநேக மாணவர்கள் சமஸ்கிருத வகுப்பில் சேர்ந்துகொண்டார்கள்! எனக்குச் சமஸ்கிருதம் எவ்வளவு தெரியுமென்று பண்டிதர் என்னை வினவினர். நான் பேசாமலிருந்தேன். ஆனால், குருதத்தர் நகைத்துக் கொண்டு "இவர் புதிதாக மாறுதலடைந்தவர். இதுவரையில் முஸல்மானாயிருந்து, இப்பொழுது இந்துவாய்த் திரும்பியிருக்கிறார்" என்று கூறினர். சமஸ்கிருதப் பண்டிதர் ஒன்றும் கூறாமல் நகைத்தார்.

கல்லூரியில் சேர்ந்த பிறகுதான் எல். ஹன்ஸ்ராஜும் சமஸ்கிருதம் கற்கத் துவங்கினர். இண்டர்மீடியட் பரீட்சைக்குப் போதிய சமஸ்கிருத அறிவை ஒரு வருடத்தில் நான்பெற்றுவிடலாமென்று குருதத்தர் எனக்குத் திடம் கூறினர். சமஸ்கிருதத்தில் நான் கற்றது மிகவும் சொற்பமே. ஆனால், என் வாழ்வில் என்னைப் பக்கா இந்துவாக மாற்றிய முதல்நிகழ்ச்சி இதுவே யாகும். பின்னே நோக்கும் பொழுது, இதைப்பற்றி நான் ஒருபொழுதும் வருத்தப்பட்டதேயில்லை.

ஏறக்குறைய இந்தக் காலத்தில், சுரேந்திரநாத் பானர்ஜீயின் ஆங்கிலச் சொற்பொழிவுகள் எனக்குப் படிக்கக் கிடைத்தன. இவற்றுள் ஜோஸப் மஸ்ஸினியைக் குறித்த பிரஸங்கமுமிருந்தது. நான் அதனைப் படித்தபொழுது, எனக்குப் பலமுறை கண்ணீர் வந்துவிட்டது. எனது இளகிய இதயத்தில், இது பெரிதும் பதிந்துவிட்டது. எனது வாழ்வு பூராவும் மஸ்ஸினியின் உபதேசத்தைப் பின்பற்றி, எனது நாட்டுக்குத் தொண்டுபுரிவதென நான் தீர்மானித்துவிட்டேன். மஸ்ஸினியை எனது குருவாகக் கொண்டேன்; இன்று வரையில் அவரே எனது குருவாயிருந்து வருகிறார்.

இது ௧௮௮௨-௮௩-ம் ஆண்டில் நிகழ்ந்தது. (இதுவரையில் நான் ஆரிய சமாஜத்தில் சேரவில்லை; உண்மையில், அதனிடம் விசேஷப் பிரியமும் கிடையாது.) இதன் பின்னர், எனது சட்டப்படிப்பில் அசிரத்தை ஏற்படத் துவங்கியது. பாடத்திட்டத்தில் என் மனம் செல்லவில்லை. எனது உணர்ச்சி, உயரப் பறக்க விரும்பியது; ஆனால், எனது பெற்றோரின் வறுமைகளையும் கஷ்டங்களையும் எண்ண, மனம் சோர்ந்தேன். அநேக சமயம், என் முன்னே பினல்கோடு (தண்டனைச் சட்டம்) அல்லது வேறேதாவது சட்டப் புத்தகம் திறந்துகிடக்கும்; சென்ற காலத்தைப்பற்றி ஜனங்களுக்கு எடுத்துக்கூறும் பிரசங்கமொன்றை நான் தயாரித்துக் கொண்டிருப்பேன். அப்பொழுது நான் ஓர் தினக்குறிப்பை வைத்துவந்தேன்; அதில் எனது கருத்துக்களைக் குறித்து வந்தேன். அந்தத் தினக்குறிப்பும், அந்தோ! அழிந்துபோய்விட்டது.

எனது கருத்துக்களில், இவ்வாறாக ஓர் பெரும் புரட்சி ஏற்பட்டது. நான் ஆரிய சமாஜத்தைச் சேரும்பொழுதே, எனக்கு மிக முற்போக்கான கருத்துக்கள் இருந்து வந்தன. (௧௮௮௨-ம் ஆண்டில்) நான் ஆரிய சமாஜத்தைச் சேர்ந்தேன் என்று பண்டித அக்னிஹோத்ரி அறியவந்ததும், அவருக்குப் பெரிதும் வியப்பு உண்டாயிற்று. எவ்வித யோசனையுமின்றி ஒரு மரத்திலிருந்து பறந்து இன்னொன்றின்மீதமரும் ஓர் பறவைக்கு, அவர் என்னை பகிரங்கப் பிரசங்கமொன்றில் ஒப்பிட்டார்.

௧௮௮௬-ம் ஆண்டில், ஜாக்ரேயனில் ஓர் முக்தாராக நான் தொழில் துவங்கினேன். எனது அரசியற்கருத்துக்கள் மேலும் அபிவிருத்தியடைய, அங்கு எனக்கு வசதியில்லை. ஆனால், அந்தக் காலத்தில் கூட, "ராங்கி இந்தி" என்ற பத்திரிகைக்கு நான் கட்டுரைகள் எழுதிவந்தேன். அந்தப் பத்திரிகையின் ஆசிரியரான மௌல்வி முகாம் ஆலி சிஸ்டியும்என்னைப்போலவே இளைஞர். எனது கட்டுரைகளை அவர் எப்பொழுதும் வரவேற்றார்.

லாகூரில் மாணவனாயிருந்த காலத்தில், ஓர் இந்தியரைக் கொலை செய்ததற்காக ஓர் வெள்ளைக்காரர் மீது வந்த ஓர் வழக்கு விசாரணைக்கு நான் சீப் கோர்ட்டுக்கு ஒரு முறை நான் சென்றேன். ஜூரர்கள், கொலையாளியை விடுதலை செய்துவிட்டார்கள். இந்தத் தீர்ப்பிற்கு விரோதமாக இந்துக்களுக்குப் பெரிதும் கோபம் உண்டாயிற்று. எனக்கும் இந்தக் கோபம் உண்டாயிற்று. ஆனால், இன்னும் எனது தேசியம் பூர்த்தியானதாகவில்லை. ஆரிய சமாஜப் பிரசங்கங்களின் போது, அரசாங்கத்தை நான் ஆதரித்துக் காலக்ஷேபம் செய்வது வழக்கம். அந்த நாட்களில், இது வழக்கமாயிருந்ததுந் தவிர, முஸல்மான்களின் கொடுமையிலிருந்தும் நம்மை ஆங்கிலேயர் காப்பாற்றினதாகவும் நான் நம்பினேன். ௧௮௮௬ முதல் ௧௮௯௨-ம் ஆண்டுவரையில், எனது அரசியல் கருத்துக்களுக்கு எதும் ஊட்டம் கிடைக்கவில்லை. பிற ஜனங்களைப் போலவே, ஆங்கில, உருது சமாசாரப் பத்திரிகைகளைப் படிப்பது வழக்கம்; சில சமயம் ஆங்கிலப் பத்திரிகைகட்கும் எழுதிவந்தேன்; ஒவ்வொரு சமயம் அவற்றைப்பற்றிப் பேசுவேன்; ஆனால், எந்த அரசியல் பிரச்னைகள் குறித்தும் நான் விசேஷமாக ஆராயவில்லை; எந்த அரசியல் இயக்கத்திலும் கலந்துழைக்கவுமில்லை. வக்கீல் பரீட்சையில் தேறுவதிலேயே எனது சக்தி முழுவதையும் முக்கியமாக ஈடுபடுத்தினேன். ஏனெனில், எங்கள் வருமானக்குறைவு காரணமாக எனது பெற்றோர் பெரும் கஷ்டங்களையனுபவிக்க வேண்டியிருந்ததைக் கண்டேன். ஆனால், தேசியத் தொண்டு எண்ணம் ஒன்றுமேயில்லாமல், முற்றிலும் சட்டப்படிப்பிலேயே என் மனம் எந்தக் காலத்திலேனும் ஈடுபட்டிருந்ததாக எனக்கு ஞாபகமில்லை.

கடைசியில், ௧௮௮௯-ம் ஆண்டில் சட்டப் பரீட்சையில் தேறியதும், ௧௮௮௧-ம் ஆண்டில் வக்கீலாகத் தொழில் புரியத் துவங்கி, பணம் சம்பாதிக்கலானேன். அப்பொழுது எனது சொந்தப் படிப்புக்காக, நல்ல புத்தகங்களைத் திரட்டினேன். ஒரு தடவை தீபாவளி தீபங்களைப் பார்வையிடுவதற்காக ஜில்லா மாஜிஸ்திரேட் சுற்றிவந்தபொழுது, எனது புத்தகசாலையைப் பார்த்துத் தாம் பொறாமை கொள்ளுவதாக அவர் கூறினர். தமது புத்தகசாலையினும் மிக உயர்ந்ததாக எனதுபுத்தகசாலையிருப்பதற்குத் தாம்வெட்கிப்பதாக, தம்முடன் கூட வந்திருந்த ஜூனியர் அஸிஸ்டண்ட் கமிஷனரிடம் அந்த ஜில்லா மாஜிஸ்திரேட் கூறினர்.

நான் ஹிஸ்ஸாரிலிருந்த காலத்தில், எல்லா வகையான நூல்களையும் நான் படித்தேன். இந்தக் காலத்தில், ஓர் ராய்சாஹிப் இருந்த ஒரு வீட்டிற்கு ஒரு சமயம் நான் போக நேர்ந்தது. அந்த மாகாணத்தில், மிகப் பிரபலஸ்தராக அவர் மதிக்கப்பட்டிருந்தார். அவரது தேச பக்தி பிரசித்தமானது. ஆனால், அரசாங்க உத்தியோகஸ்தராதலால், நிக்கற்றவராயிருந்தார். ஐரோப்பாவிலுள்ள இரகசியச் சங்கங்களைப் பற்றிய சரித்திரத்தின் இரண்டு பாகங்களை ராய்முல்ராஜ்—இவர்தான் நான் குறிப்பிடும் கனவான்—ஏதோ வோர் புத்தகசாலையிலிருந்து இரவல் வாங்கி வைத்திருந்தார். அப்புத்தகத்தின் சில பகுதிகளை அவர் என்னிடம் படித்துக் காண்பித்தார். அந்தப் புத்தகம் பூராவையும் படிக்க எனக்கு ஆவல் உண்டாயிற்று. அவ்விடத்திலேயே அப்பொழுதே சில பக்கங்களை நான் படித்தேன். ஆனால், அவற்றை என் வீட்டிற்கு எடுத்துச்செல்ல அவர் அனுமதிக்கவில்லை.அந்தப் புத்தகமும் மஸ்ஸினியின் புத்தகமும் கிடைக்குமாவென்று பல புத்தக வியாபாரிகளிடம் விசாரித்தேன். ஒருவரிடத்திலும் அவை கிடைக்கவில்லை. கடைசியில் அந்தக் காலத்தில் இங்கிலாந்திலிருந்த பஞ்சாபி இளைஞரொருவருக்கு எழுதினேன். இரண்டு புத்தகங்களையும்—மஸ்ஸினியின் சரித்திரத்தையும், ரகசியச் சங்கங்களின் சரித்திரத்தையும்—அவர் எனக்கு அனுப்பினர். அந்தப் புத்தகங்கள் எனக்குக் கிடைத்த நாளன்று நான் எவ்வளவு சந்தோஷித்தேன் என்பது எனக்கு நன்றாக நினைவிருக்கிறது.

---

எடிஸன் என்பவர் இவ்வுலகத்தில் புதிய இயந்திரங்களைக் கண்டுபிடித்தவர்களெவருக்குள்ளும் மிகக் கியாதிபெற்றவர். இவர் அமெரிக்கா தேசத்தவர்; வயது அஉ. இந்த வயதிலும் நாளொன்றுக்கு கஅ-மணி நேரம் வேலைசெய்து வருகிறார். நாலு மணிநேரமே தூங்குகிறார். அவருடைய உணவு தானிய வர்க்கங்களும் பாலுமே. இவர்தான் மின்சார விளக்கையும் போனகிராப் பெட்டியையும் கண்டுபிடித்தவர். டெலிபோனும் ஸினிமாவும் உலகத்தில் அதிகமாய்ப் பரவுமாறு இயந்திரங்கள் அமைத்தவரும் இவரே. மின்சார சக்தியை உபயோகித்து இவர் புதிதாய்க் கண்டுபிடித்த இயந்திரங்கள் உலகத்திற்குப் பலவகையிலும் பயன் தந்திருக்கின்றன. இவர் ஒருவர் பெயரால் கங00 புதிய கருவிகள் ரிஜிஸ்டர் செய்யப்பட்டிருப்பதாய்த் தெரிகிறது. இவர் கண்டுபிடித்த இயந்திரங்களைக் கொண்டு இப்பொழுது உலகத்தில் நடந்துவரும் தொழில்களில் சஙுO கோடி ரூபாய்க்கு மேல் மூலதனம் போடப்பட்டிருக்கிறதென்று கணக்கிட்டிருக்கிறார்கள். இத்தகைய மேதாவி சாராயம் முதலிய லாகிரி வஸ்துக்களைத் தொட்டதேயில்லை. பூரண மது விலக்குக் கொள்கை கொண்டவர்.

*　　*　　*

## பொய் விளம்பரம்.

ஆசிரியர் ஜான் ஹே என்பவர் லிவர்ப்பூல் சர்வ கலாசாலையில் மருத்துவ நூலாசிரியர் ஆவர். இங்கிலாந்திலுள்ள மார்பு நோய் நிபுணர்களில் அவர் ஒருவர். சமீபத்தில் மான்செஸ்டரில் பேசுகையில் அவர் கூறியதாவது:—“மதுசாரம் ஓர் உணவுப் பொருள் அன்று. அது நரம்பைக் கொல்லும் ஒரு வஸ்துவேயாகும். தொத்துநோய் தொடராவண்ணம் பாதுகாத்துக்கொள்ள நமது உடம்பிற்குள்ள இயற்கைச் சக்தியை அது குறைத்து விடுகிறது. மதுபானம் செய்யும் மனிதனுக்குக் கபவாத சுரம் வந்தால் அவன் பிழைத்தெழுந்திருப்பது அருமை. கபவாத சுரத்தினாலும், க்ஷயரோகத்தினாலும் சாகிறவர்கள் குடிகாரர்களுக்குள் அதிகம். முழுக் குடிகாரனுக்குத்தான் இது பொருந்தும் என்று நினைக்கக்கூடாது. மிதமாகக் குடிப்பவர்கள் கூட நோய்களை எதிர்த்து நிற்கும் சக்தியை இழந்து விடுகிறார்கள். இந்த விஷயங்களெல்லாம் ஐயமின்றி நிரூபிக்கப் பட்டிருக்கின்றன. ஆயினும் மது உடம்புக்கு நல்லதென்றும், அது உணவுப் பொருள் என்றும் மது வியாபாரிகள் விளம்பரம் செய்வதைக்கண்டு பலர் ஏமாந்து விடுகிறார்கள். பல தடவை கேட்கும் விஷயம் பொய்யாயினும் மெய்போல் ஜனங்களுக்குத் தோன்றி விடுகிறது. எனவே, சாராயத்தைப் பற்றிய பொய்யுரைகளை அடிக்கடி கண்டிக்கவேண்டியது அவசியமாகும். அப்போதுதான் குழந்தைகளும் இளைஞர்களும் பொய் விளம்பரங்களினாலும் ஏமாந்து போகாமல் தடுக்க முடியும்.”

*　　*　　*

## வைத்தியர்களின் அத்தாட்சி.

பிரிட்டிஷ் அரசாங்க உள் நாட்டு மந்திரி கேட்டுக்கொண்டதின் பேரில் இங்கிலாந்தின் வைத்திய ஆராய்ச்சிச் சபையார், மதுசாரத்தின் நன்மை தீமைகளைக் குறித்து ஆராய்ச்சி செய்ய விஞ்ஞானப் புலவர் எட்டுப் பேர் அடங்கிய ஒரு கமிட்டியை நியமித்தார்கள். இக் கமிட்டியாரின் முடிவுகளில் ஒன்று வருமாறு:—“மதுசாரம் மூளையைப் பலவீனப்படுத்துகிறது; நரம்புத் தளர்ச்சி உண்டாக்குகிறது. கொஞ்சமாக மது அருந்துபவர்களுக்குப் போதை உண்டாகாவிடினும் மனோபலவீனம் உண்டாதல் நிச்சயம். இதனால் அவர்களுடைய வேலைத்திறமை குறைகிறது. அபாய சம்பவங்கள் நேரிடுகின்றன. சட்டுப்பாடு குலைகிறது.”

அமெரிக்காவில் இல்லினாய் மாகாணத்திலுள்ள ஒரு சங்கத்தார் பின்வரும் பிரபல வைத்தியர்களின் அபிப்பிராயங்களைச் சேகரித்துப் பிரசுரித்திருக்கிறார்கள்:—

“மது சாரம் இரத்தத்தைக் கெடுக்கிறது. இரத்தத்திலுள்ள ஜீவ அணுக்களின் வளர்ச்சியைத் தடை செய்கிறது.”—வைத்திய ஆசிரியர் விர் ஷாவ், எம். டி.

“நான் சிகிச்சை செய்திருக்கும் எந்த வியாதிக்காவது, அல்லது வேறு விபத்துகளினால் ஏற்பட்ட காயங்களுக்காவது எந்த விதமான மதுவும் அவசியமென என் அநுபவத்தில் கண்டதில்லை.”—டாக்டர் நாதன் டேவிஸ், எம். டி.

# கடற்கரைக் கிளிஞ்சல்.

“மது சாரத்தை மருந்தாக உபயோகப்படுத்துவது மிக அபாயகரமென்று நான் கருதுகிறேன்.”—டாக்டர் ஜே. எச். மஸ்ஸர், எம். டி. (பிலாடெல்பியா.)

“இரண்டு மனிதர்களுக்கு ஒரே விதமான நோய் வந்தால், மற்ற எல்லா நிலைமைகளும் ஒத்திருக்கும் பட்சத்தில், மதுஅருந்துபவனைவிட மது அருந்தாதவன் விரைவில் பிழைத்துக் கொள்வான். மது சாரம் உடம்புக்குப் போஷிப்பு அளிப்பதில்லை; கிளர்ச்சி கொடுத்துக் களைப்படையச் செய்கிறது. உற்சாகம் தருவதில்லை; சோர்வுறச் செய்கிறது.”—டாக்டர் நார்மன் கெர் (இங்கிலாந்து.)

“மது சாரம் ஒரு விஷப் பொருள். அதனால் விளையும் தீமைகளை எங்கும் கண்கூடாகக் காணலாம்.”—டாக்டர் ஜி. விம்ஸ் உட் ஹெட், எம். டி.

*　　*　　*

## குழந்தைகளைக் கேளுங்கள்.

“இவ்வுலகில் இது காறும் மனிதவர்க்கத்தைப் பீடித்திருக்கும் எந்தக் கொடும் பிசாசையும்விட அதிகமாய்க் குடிப்பேய் மக்களின் இரத்தத்தை உறிஞ்சி யிருக்கிறது; வேறெந்தக் கொடுமையையும்விட அது அதிக ஜனங்களை வீடு வாசலில்லாத பரதேசிகளாகச் செய்திருக்கிறது; அதிகம் பேரை வறுமைக் குழியில் வீழ்த்தியிருக்கிறது; அதிகக் குழந்தைகளைக் கொன்றிருக்கிறது; அதிகக் குடும்பங்களைக் கெடுத்திருக்கிறது; அதிகமான கண்களைக் குருடாக்கியிருக்கிறது; அதிகம் பேரை அங்கவீனர்களாய்ச் செய்திருக்கிறது; பைத்தியமாக்கியிருக்கிறது; ஆண்மை குலையச் செய்திருக்கிறது; அதிக ஜனங்கள் மனமுடைந்து வாழ்வு குலைந்து தற்கொலை செய்து கொள்ளக் காரணமாயிருந்திருக்கிறது; வேறெந்தக் கொள்ளைநோயையும்விட அது அதிக மரணங்களை உண்டாக்கியிருக்கிறது.

“குழந்தைகளைக்கேளுங்கள்! சின்னஞ்சிறு குழந்தைகள், கொடுமைக்காளான குழந்தைகள், நொண்டிக் குழந்தைகள், குருட்டுக்குழந்தைகள், மூடக் குழந்தைகள், தாய் தகப்பனறியாத் குழந்தைகள், பட்டினி கிடக்கும் குழந்தைகள், அடித்துத் துன்புறுத்தப்படும் குழந்தைகள், மாண்டுபோன குழந்தைகள்—இவர்கள் எல்லாரையும் கேளுங்கள்! குடியின் கொடுமைக்குச் சாட்சி கூறுவார்கள்.”

—எவாஞ்சலின் பூத்,
ஸால்வேஷன் சைனியத்தலைவர்.

“ஆசை காட்டி மோசம் செய்வதில் மதுவுக்கு மிஞ்சியது வேறொன்றுமில்லை. அது பலந்தருவதாய் ஆசை காட்டுகிறது; உண்மையில் பலவீனந்தருகிறது. வெப்பந்தருவதாய் ஆசை காட்டிப் பின்னர் குளிரைத் தருகிறது. உயிர் அளிப்பதாய்ச் சொல்லி அகால மரணத்தைக் கொடுக்கிறது. அறிவு தருவதாய் ஆசை காட்டி மூளைக்குழப்பத்தை அளிக்கிறது.”

டாக்டர் நார்மன் கெர்.

*　　*　　*

## விஷத்தினும் கொடியது.

பெயர் பெற்ற பௌதிகப் புலவரும், ஆராய்ச்சிக் காரருமான தாமஸ் ஹக்ஸ்லி என்பவரை, “மது சாரம் மூளை வேலைக்கு ஒத்தாசை செய்கிறதா?” என்று ஒரு முறை கேட்டார்கள். அதற்கு அவர் கூறிய பதிலாவது:—“என்னைப் பொறுத்தவரையில், மது அருந்துவதைக் காட்டிலும் விஷத்தைக் குடித்துவிடுவேன். விஷத்தைவிட மது அபாயகரமானது என்று நான் தயங்காமல் கூறுவேன். ஏனென்றால் விஷம் மதுவைப் போல் சன்மார்க்கத்தவறுதலுக்குக் காரணமாயிருப்பதில்லை. போதை கொண்டு இழிவுற்றுப் பல நாள் துன்பப்பட்டுச் சாவதைவிட ஒரேயடியில் செத்துப் போதல் எவ்வளவோ மேலல்லவா?”

மருந்துக்காகவன்றி வேறு காரியங்களுக்காக விஷம் விற்பவர்களை உலகெங்கும் அரசாங்கத்தார் தண்டிக்கிறார்கள். ஆனால் விஷத்தினும் கொடிய மது விற்பதற்கு நமது அரசாங்கத்தார் எல்லாவகை உதவியும் செய்து கொடுத்து லாபத்திலும் பங்கு பெறுகிறார்கள்! இது விந்தையல்லவா?

*　　*　　*

## அன்றும் இன்றும்.

லண்டனிலுள்ள ஆங்கில-இந்திய மது விலக்குச் சங்கத்தின் காரியதரிசி மிஸ்டர் பிரடரிக் கிரப்பின்வருமாறு எழுதியிருக்கிறார்:—

“இந்திய மக்கள் ஐரோப்பியரிடமிருந்தே குடிப்பழக்கம் கற்றுக் கொண்டார்கள் என்பது மிகைப்படுத்துவதாகும். ஹிந்து சாஸ்திரங்கள் குடிப்பழக்கத்தைக் கண்டித்த போதிலும் ஆதிகாலத்திலிருந்து இந்தியாவில் அத்தீமை இருந்து வந்ததென்பதற்குப் பல அத்தாட்சிகள் எடுத்துக் காட்டலாம். ஆனால் எவ்விதச்சந்தேகத்துக்கும்இடமின்றி நமக்குத் தெளிவாகத் தெரியவரும் விஷயங்கள் மூன்று உண்டு. அவையாவன:—(க) இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சிக்கு முந்தைய காலத்தில் ஆங்காங்குச் சிற்சிலவகுப்பு ஜனங்களே குடித்துவந்தார்கள். (உ) சென்ற ஐம்பது வருஷகாலத்தில் குடிப்பழக்கம் அதிவேகமாகப் பரவி வந்திருக்கிறது; குடிகாரர்களும் பெருகி வந்திருக்கிறார்கள். (ங) பழைய காலத்தில் மது விற்பனை அரசாங்க ஆதரவின்றி நடந்து வந்தது. இப்பொழுது அரசாங்கத்தின் வருமானத்துறைகளில் அது முக்கியமானதொன்றாகி விட்டது.”

இந்தியர்கள் ஐரோப்பியர்களிடமிருந்து தான் குடிப்பழக்கம் கற்றுக்கொள்ளவில்லையென்பது உண்மையே. ஆனால் இந்தியாவில் இதற்குமுன் குடித்தல் இழிவான பாவமென்றே கருதப்பட்டு வந்தது. ஐரோப்பியர்களின் கூட்டுறவின் பயனாக இப்போது குடிக்கு ஓரளவு கௌரவம் ஏற்பட்டு வருகிறது.

*　　*　　*

## மதுவிலக்கு விரோதிகள் யார்?

பம்பாய் மாகாணத்தின் விவசாய இலாகா டைரக்டராயிருந்த டாக்டர் ஹாரால்டு மான் என்பவர் லண்டனில் நடந்த ஆங்கிலோ இந்திய மது விலக்குச் சங்கத்தில் பின்வருமாறு பேசினார்:—

“இங்கிலாந்துடன் ஒப்பிட்டால் இந்தியாவில் குடித்தீமை குறைவேயாகும். பொதுவாகக் கூறின், கள்ளு, சாராயக் கடைகளை மூடுவதற்கு ஜனங்கள் மனப்பூர்வமாக ஆதரிப்பார்கள். குடிப்பழக்கமுள்ளவர்களும் அதற்குச் சாதகமாகவே இருப்பார்கள். தேசத்தின் அரசியல் தலைவர்களும் பொதுவாக மதுவிலக்கை ஆதரிக்கின்றனர். உண்மையில். அரசாங்க அதிகாரிகளைத் தவிர்த்து, கள்ளு, சாராயக் கடைகளை மூடக்கூடாதென்று சொல்பவர் அநேகமாக இல்லை. அப்படி யாரேனும் சொன்னாலும் அரசாங்க வருவாயைப்பற்றிய காரணங்களுக்காகவே சொல்வார்கள். குடிப்பழக்கமுள்ள வகுப்பாருக்குக் குடிப்பதற்கு வசதிகள் அளிக்க வேண்டுமென்று சொல்வது சுத்தமாய்ப் பொருளற்றது. ஏனென்றால், குடிப்பவர்களில் மிகப் பெரும்பான்மையோர் அந்த வசதிகள் வேண்டாமென்கிறார்கள்.”

குடிப்பவர்களுக்குக் குடியின் தீமைகளை எடுத்துச் சொல்லும் பிரசாரம் அவசியமில்லையென்று டாக்டர் மான் கூறுவதிலிருந்து நன்கு வெளியாகின்றது. குடிகாரர்கள் குடியின் தீமைகளை ஏற்கனவே நன்குணர்ந்திருக்கிறார்கள். பிரசாரம் சட்டசபை அங்கத்தினர், மந்திரிமார், பெரிய அதிகாரிகள் முதலியோரிடையேதான் முக்கியமாகச் செய்யப்பட வேண்டும். இவர்களைக் கட்டாயப்படுத்தி மதுவிலக்குச் சட்டம் இயற்றும்படி செய்யும் சக்திவாய்ந்த வாக்காளரிடையிலும் அப்பிரசாரம் செய்ய வேண்டும்.

*　　*　　*

## தொழிற்கட்சி மந்திரிகள்.

தற்போது பிரிட்டிஷ் இராஜ்யத்தை ஆட்சிபுரியும் தொழிற்கட்சி மந்திரிகளில் பலர் மதுபானத்தின் தீமைகளை நன்குணர்த்தவர்களென்று தெரிகிறது. பொக்கிஷ மந்திரி மிஸ்டர் பிலிப் ஸ்னோடன் பின்வருமாறு சொல்லியிருக்கிறார்:—

“மது வியாபாரம் செல்வத்தை அழித்து வறுமை, கொலை, களவு, குற்றங்கள், நோய், பைத்தியம், மரணம் ஆகியவற்றை உண்டு பண்ணுகிறது. தற்போது மது வியாபாரத்தில் ஈடுபட்டிருப்போர் அனைவருக்கும் அரசாங்கப் பொக்கிஷத்திலிருந்துஉபகாரச் சம்பளம் கொடுத்து அவர்களைச் சும்மாயிருக்கும்படி செய்தால் தேசத்துக்கு அளவற்ற நன்மை உண்டாகும்.”

முதன் மந்திரி மிஸ்டர் ராம்ஸே மக்டனால்ட் பின்வருமாறு சொல்லியிருக்கிறார்:—

“பிரதிவருஷமும் நாம்ஏராளமானபணம் குடிக்காகச் செலவு செய்து வருகிறோம். இந்தப் பணத்தை நாம் எப்படியாவது செலவழிக்கத்தான் போகிறோமென்றால், நமது மனைவி மக்களுக்குப் புதிய உடைகள் வாங்குவதிலும், தரையில் விரிக்க ஜமுக்காளங்களும், வீட்டை அலங்கரிக்கப் படங்கள் வாங்குவதிலும், விடுமுறை நாட்களில் நாட்டுப்புறங்களுக்குச் சென்று ஆண்டவன் அளித்த தூய காற்றைச் சுவாசிப்பதிலும் அதைச் செலவழித்தால் எவ்வளவோ மடங்கு நன்மையாயிருக்குமல்லவா? பணத்தைத் தாராளமாய்ச் செலவு செய்யுங்கள், நான் வேண்டாமென்று சொல்லவில்லை. ஆனால் அதை அறிவுடைய வழிகளில் செலவழியுங்கள்.”

அயல்நாட்டு மந்திரி ஆர்த்தர் ஹெண்டர்ஸனின் அபிப்பிராயம் வருமாறு:—

“பொருளாதாரத் துறையிலும் சரி, அரசியல் துறையிலும் சரி, தொழிலாளிகளின் கதிமோட்சத்துக்கு முக்கிய தடையாயிருப்பது குடியைப்போல் வேறொன்றில்லை.”

இப் புதிய மந்திரிகள் தாங்கள் அதிகாரத்துக்கு வந்ததும் செய்த காரியங்களில் ஒன்று, ஆங்கில நாட்டில் மதுபானத் தீமையைப்பற்றி விசாரணைசெய்ய ஒரு கமிஷனை நியமித்ததாகும். ஆனால், இவர்களுடைய மது விலக்குக் கொள்கை சு,000 மைல் தாண்டிப் பாரத தேசம் வரையில் வந்து எட்டும்படி அவ்வளவு தீவிரமானதா என்பது இனித்தான் தெரியவேண்டும்.

மார்லி பிரபு ஆங்கில தேசத்தில் புகழ் பெற்ற புலவர்; சிலகாலம் இந்தியா மந்திரியாயிருந்து பெயர் பெற்றவர். அவர் ஒரு சமயம் மதுபானத்தைப்பற்றிப் பேசுங்காலத்தில் சொன்னதாவது:—“உயிரைக் கொல்லும் புதியதொரு கொள்ளை நோய் இந்தியாவைப் பீடிக்க ஆரம்பித்திருக்கிறது; அதுதான் மது பானம்.”

[குறிப்பு:—இந்த அரிய குறிப்புக்கள் “விமோசனம்” என்ற பத்திரிகையினின்றும் எடுத்தளிக்கப்பட்டிருக்கின்றன.]





(பிளேன்பரோப் பிரபு, டெம்லின் பிரபு, தாங்கடர்ட்டன் பிரபு, ஸர் ஜியார்ஜ் லவுண்ட்ஸ், ஸர் பினாட் மித்தர் ஆகியவர் முன்பாக.)

# “மாறல்” என்பதன் அர்த்தம்.

## பிரிவி கவுன்ஸில் தீர்ப்பு.

ஒரு மனிதர் மாறலாக வேறொருவருடைய பணத்தை ஒரு நாட்டுக்கோட்டைச் செட்டியாரிடம் கொடுத்து வைத்தால், பணம் கொடுத்துவைத்த மாறல்தாருக்கு, குறிப்பிட்ட நாட்டுக்கோட்டை செட்டியார் எம்மட்டில் ஜவாப்தாரியாவார் என்ற விஷயமாக சென்னை உயர்தர நீதிமன்றத்தில் நடந்த தீர்ப்புக்கு,பிரிவி கௌன்ஸிலில் அப்பீல் செய்யப்பட்டதன் விபரமும் பிரிவி கௌன்ஸிலின் ஜூலை௴ ௨-வயிட்ட தீர்ப்பும் “ஹிந்து”வில் வெளியாயிருக்கின்றன. அந்த விவரம் வருமாறு:—

கஅஅஅ-ம் வருடத்தில் நாட்டுக்கோட்டைச் செட்டியார் வகுப்பைச் சேர்ந்த ராமநாதன் என்ற ஒருவர் குழந்தைகள் இல்லாமலிருந்த நிலைமையில் காலஞ்சென்றார். மேற்குறிப்பிட்ட இராமநாதன் செட்டியாருடைய மனைவி வள்ளியம்மை, தன்னுடைய புருஷன் இறந்தவுடன் தன்னிடம் ஸ்திரீதனமாகத் தன்னுடைய தகப்பனார் வீரப்ப செட்டியார் கொடுத்ததும் தன்னுடைய மாமனாரிடமிருந்து கிடைத்ததுமாகிய மொத்தம் தொகை ௫000 ரூபாயை செட்டியார் ஜாதி வழக்கப்படி தன் தகப்பனாரிடம் கொடுத்திருந்தாள். வீரப்ப செட்டியார் இந்தப் பணத்தை ரங்கூனில் ஒரு செட்டியார் கடையில் கொடுத்து வைத்திருந்தார். கஅகூஉ-ல் வீரப்ப செட்டியாருடைய ரங்கூன் எ. எம். வி. ஆர். கடையார் இந்தத் தொகையை முன் கொடுத்துவைத்திருந்த கடையிலிருந்து வாங்கி ரங்கூனில் வி. இ. எ. என்ற கடையில் கொடுத்தார்கள். வி. இ. எ. கடையில் கொடுக்கும்பொழுது இந்தத் தொகை ரூபாய் பதினாயிரமாகியிருந்தது. வி. இ. எ. கடையில் இந்தத் தொகையை ஆர். எம். எ. ஆர். எம். கடை (வள்ளியம்மையினுடைய காலஞ்சென்ற புருஷனுடைய கடை விலாசம்) வரவு எ. எம். வி. ஆர். மாறல் என்று வரவு வைக்கப்பட்டிருந்தது. அதாவது வீரப்ப செட்டியாருடைய கடை மாறல் வந்ததாக வரவு வைக்கப்பட்டிருந்தது. பின்னர், கஅகூ௫-ம் வருடத்தில் வள்ளியம்மை ஒரு ஸ்வீகாரம் செய்தார்கள். ஸ்வீகாரச்செலவுக்கு வேண்டிய பணங்கள் வாங்கியதும், பின்னர் பணங்கள் செலுத்தியதும் வீரப்ப செட்டியார் கடை மாறலாக நடந்து வந்தது. இந்தப் பணங்களின் வட்டித் தொகையும் வி. இ. எ. கடையில் வரவு வைக்கப்பட்டு வந்தது. வி. இ. எ. கடையிலிருந்து இந்தப் பணத்துக்கு வருட முடிவிலுள்ள கணக்கை மேற்படியார் எ. எம். வி. ஆர். கடைக்கனுப்பிவந்தனர். கக0௪-ம் வருடத்தில் ரங்கூனில் எ. எம். வி. ஆர். கடையின் ஒரு கிளை திறக்கப்பட்டது. கடை திறந்தவுடன் அவர்கள் இந்தப் பணம் பூராவும் கொடுத்தனுப்பும்படி வி. இ. எ. கடைக்குத் தெரிவித்தார்கள். அதற்கிணங்கி வி. இ. எ. கடையிலிருந்த பணம் பூராவும் மேற்படியார்கள் கொடுத்தனுப்பிவிட்டார்கள். அத்துடன் வி. இ. எ. கணக்குப் பூராவும் முடிந்தது. கக0௪-ம் வருடம் முதல் கக௧எ-ம் வருடம் வரை வள்ளியம்மையும் அவருடைய ஸ்வீகாரப் புத்திரனும் எ. எம். வி. ஆர். கடையிலிருந்து பல தடவைகளில் ரூ. அஎ00 பற்றியிருந்தார்கள். இந்தத் தொகை நீக்கிப் பாக்கித் தொகையைக் கணக்குப்பார்த்துத் தங்களுக்குக் கிடைக்கவேண்டுமென்று வள்ளியம்மையும் அவருடைய ஸ்வீகாரப் புத்திரனும் எ. எம். வி. ஆர். கடையின் பேரிலும் வி. இ. எ. கடையின்பேரிலும் வியாஜ்ஜியம் போட்டார்கள்.

கொடுத்து வைத்திருந்த பணத்துக்கு, பிரதிவாதிகளில் யார் ஜவாப்தாரி என்பது இந்த தாவாவில் முக்கிய வினாவாக ஏற்பட்டது.

கீழ்க்கோர்ட்டில் மேற்படி பணத்துக்கு இரண்டு பிரதிவாதிகளும் ஜவாப்தாரிஎன்று தீர்ப்புக் கூறப்பட்டது. ஹைகோர்ட்டில் அப்பீல் செய்ததில், பணத்துக்கு எ. எம். வி. ஆர். கடை மட்டிலும் ஜவாப்தாரியென்றும் வி. இ. எ. கடை ஜவாப்தாரியல்லவென்றும் கூறப்பட்டது. இந்தத் தீர்ப்பின் பேரில் இந்த அப்பீல் செய்யப்பட்டிருக்கிறது.

சர் ஜார்ஜ் லௌனட்ஸ் அவர்கள் கௌன்ஸிலினுடைய தீர்ப்பைக் கூறி அப்பீலைத் தள்ளுபடி செய்கையில் கூறியிருப்பதாவது:-“வி. இ. எ. கடைக்கணக்குகளில் பணம் அப்பீல் வாதிகள்பேரால் வரவு வைக்கப்பட்டிருந்த காரணத்துக்காக, மேற்படி வி. இ. எ. கடையாரும் மேற்படி பணத்துக்குப் பொறுப்பாளிகள் என்று கூறப்படுகிறது. மேற்படி பணம் ஆர். எம். எ. ஆர். எம். கடைபேரால் வரவு வைக்கப்பட்டிருக்கிறது. அப்படி வரவுவைக்கப் பட்டிருப்பதில் வீரப்பசெட்டியார் கடைமாறலாகப் பணம் வரவு வந்ததாகக் காணப்படுகிறது. மேற்படி பணத்துக்கு வீரப்பசெட்டியாருடைய கடையிலிருந்து ரசீது கொடுக்கப்பட்டிருப்பது சட்டப்படி அப்பீல் வாதிகளைப் பாதிக்காது. அப்பீல் கோர்ட்டுத் தீர்ப்பில் வி. இ. எ. கடைக்கு ஆர். எம். எ. ஆர். எம். கடையைப்பற்றி நன்கு தெரிந்திருக்கும் என்று கூறப்பட்டிருக்கின்றது. ஆனால் வள்ளியம்மையாவது அவருடைய மகனாவது தங்களுக்கு ஆர். எம். எ. ஆர். எம். கடையுடன் தொடர்பிருப்பதாகவாவது தாங்கள் மேற்படி கடையின் சார்பாக வியாஜ்ஜியம் செய்திருப்பதாகவாவது கூறவில்லை என்று ஆட்சேபனை கூற இடமிருக்கிறது. ஆனால் வள்ளியம்மைக்கும் அவருடைய மகனுக்கும் ஆர். எம். எ. ஆர். எம். கடைக்கும் தொடர்பு இருப்பதாக வி. இ. எ. கடைக்குத் தெரியாதபோதிலும் மேற்படி கடையைப்பற்றி அவர்களுக்கு நன்கு தெரிந்திருக்கும். ஆனால் இந்த விஷயம் பிரஸ்தாப வழக்குக்குத் தேவையில்லாமலிருக்கிறது.

“மாறல்தார் என்ற வார்த்தைக்குப் பொருளைப்பற்றிக் கீழ்க்கோர்ட்டில் பெரிய வாதம் நடந்திருக்கிறது. ஆனால் அதில் சரியான முடிவுசெய்ததாகத் தெரியவில்லை. இந்த கோர்டில் நடந்த வாதத்திலும் மாறல் என்ற வார்த்தைக்குச் சட்டப்படி பொருள் இன்னதென்று கூறப்படவில்லை. ‘மாறல்தார்’ என்றால் ஒரு ஏஜண்டு மட்டுமல்ல. மாறல்தாருடைய பொறுப்பு பணம் கொடுத்து வைப்போர்களுக்கும் பெற்றுக்கொள்வோர்களுக்கும் உள்ள ஏற்பாட்டைப் பொறுத்திருக்கிறது. வீரப்பசெட்டியாரும் அவருடைய கடையும் பணத்துக்கு ஜவாப்தாரியாக விருப்பதோடு, அவருடைய இஷ்டம் போல் பணத்தை வேறொரு கடையில் மாற்றுவதற்கும் அவர்களுக்கு அதிகாரமிருக்கிறதாவென்பது யோஜிக்கவேண்டியதாகவிருக்கிறது. அதுவல்லாமல் பணத்தைப் பெற்றுக்கொண்டு அதற்குரிய ரசீதுகொடுக்க அவர்களுக்கு அதிகாரமிருக்கிறதா வென்பதும் யோஜிக்கவேண்டியதாக விருக்கிறது. மேற்கூறியகாரணங்களாலும் வீரப்பசெட்டியாருக்கும் அப்பீல் வாதிகளுக்கும் இருந்துவரும் சம்பந்தத்தினாலும் இந்தப் பணத்துக்கு வீரப்பசெட்டியாரும் அவருடைய கடையும் மட்டுமே ஜவாப்தாரியாவார்கள். அவர்கள் கேட்டவுடன் பணத்தை முற்றிலும் வி. இ. எ. கடையார், மேற்படியாரிடம் ஒப்புவித்தது சரிதான்.”

Reg. No. 1509. (16 Pages.) Tel: "Oolian"

SUBSCRIPTIONS :
Annual subscription Rs. 5
Half yearly " Rs. 3
Foreign, Annual " Rs. 6

# ஊழியன்

ADVERTISEMENTS :
One inch, S. C., per insertion As 8
Court Notices, per inch Re 1
Long standing advertisements given concessions.

## The "Oolian," a Nationalist Weekly.

Editor: Raya. Chockalingan.

Truth Persists. Service Shines.

Vol. X. Karaikudi—Tuesday, 24 th September, 1929. No. 2.

ஒவ்வொரு மனிதரும் தொழில் செய்ய விரும்புகின்றனர். எனினும், அத் தொழில்கள் முற்றுப்பெறுவதில்லை. அதற்குக் காரணம், அன்னாருக்குத் தாம் கருதிய கருமத்தில், போதியவளவு ஊக்கமின்மையேயாகும். இவ்வூக்கமானது அரசருக்கு இன்றியமையாதனவாகிய குணங்கள் நான்கினுள் ஒன்று. இதனைப்பற்றி, வள்ளுவர் நூலுக்குரை கண்டபரிமேலழகர், "ஊக்கம்—வினை செயற்கண் உள்ளக் கிளர்ச்சி" எனத் தெரிவித்துளார். எந்தத் தொழில் செய்ய வெண்ணினும், மனமும் மெய்யும் ஒன்றுபட்டு உழைக்கவேண்டும். மனமானது, தான் செய்ய வெண்ணிய தொழிலை—தொழிலால் எய்தும் பயனை—எய்துவதற்குத் தாம் தொழிலில் செய்யவேண்டிய உபாயங்களை நமக்கு அறிவிப்பதாகும். உடம்போ அவ்வுபாயங்களின் வழியே செய்து முடிப்பதாகும். ஊக்கமாவது, தான் எண்ணிய உபாயங்களின்படி மெய்யுழைத்துப் பாடுபட்டும், பயன் கிடைக்காவிடின், மேலும் மேலும் கூரிய யோசனைகள் செய்தலாம்; அதாவது மனமுடையாதிருத்தலாகும். எனவே மனமும் மெய்யும் தீவிர முயற்சியில் ஈடுபட்டிருந்தாலன்றி எத்தொழிலும் முற்றுப்பெறாது என்பது திண்ணம்.

* * *

ஒரு வினை ஆற்றுவதற்கு—அதன் பயனை எய்துவதற்கு—ஒருவன் பலகாலும் முயலுகிறான். அவன் சில முறைகளில் தனக்கேற்பட்ட தோல்வியையும் பொருட்படுத்துவதில்லை. ஏனெனில், அவனுக்கு வினையின் முடிவு ஒன்றே குறியாகும். அத்தகைய முடிவை எய்துவதற்கு இயற்றும் வினைகளால், பிற நன்மைகள் ஏற்படினும் பொருட்படுத்தமாட்டான்.

மெய் வருத்தம் பாரார் பசி நோக்கார் கண்டுஞ்சார்
............கருமமே கண்ணாயினர்."

என்ற முதுமொழியும் இதனை வலியுறுத்தும். உலகத்திலே ஒரு பொதுவான முறையுண்டு. அது, நல்லன இல்லனவாதலும்; தீயன வாழ்தலுமே. நல்லனவெல்லாம் இல்லனவாவதற்கு ஒரு காரணம் கூறலாம். எப்பொழுதும் உலகம் ஆடம்பரத்தையே விரும்பும். நல்லனவெல்லாம் ஆடம்பரப் போர்வை போர்த்து வெளிவருவதில்லை. ஆடம்பரத்தை விரும்பும் உலகம் ஆடம்பரமில்லாததை வெறுப்பது சகஜமே. உலகத்திலே நாகரிகத்தில் மிக மிக அதிகமான பழக்கம் வாய்ந்த நமது நாடு—நாகரிகத்தைப் பல தேசங்களுக்கும் கொடுத்த நாடு—பாரதநாடு—(உண்மையில்) நாகரிகமல்லாததும், நாகரிகமென்ற பொய்ப் போர்வை போர்த்து வெளிவருவதுமான அநாகரிகத்தைக் கண்டு அதன் வலைப்படவில்லையா? நம் நாட்டு நாகரிகம் எங்கே? உலகம், தீயனவற்றை—நல்லனபோலத் தோன்றும் கொடியவைகளை—நம்புகின்றது என்பதற்கு மேற்காட்டிய உதாரணம் ஒன்றே அமையுமன்றோ! எனவே, நல்லனவற்றின் வளர்ச்சியாலே நேரும் இடையூறுகளை நீக்க முயற்சிப்பதே ஆள்வினையுடைமையாகும்.

* * *

நாலடியாரிலே,

"இளையா னடக்கம் அடக்கம் கிளை [பொருள்
இல்லான் கொடையே கொடைப்பயன்"

என்ற அடிகள் மிகவும் நகைச்சுவை பயப்பன. இளமைப் பருவத்தான் இன்ப விஷயங்களில் காட்டு மனவடக்கமே அடக்கமெனப்படும்; இன்மையுடையானது கொடையே பயனளிக்கும் கொடையாகும்; என்பது இதன் பொருள். இவைபோல நல்லன வியற்றலில் மேற்கொண்ட தீவிர முயற்சியே ஆள்வினையுடைமையெனல் பிழைபடாது. ஒருவன் தீயனவியற்றலிற் றனது மெய்யுருகப் பாடுபட்டும் என்ன பயன்? தீயன நன்மை பயப்பனவா? இன்று. முதுமையுற்ற ஒருவற்கு இன்ப நுகர்ச்சியில் நசையின்மையே போல, தீயனவியற்றலிற் ஒருவன் முயற்சியுறலும் நகையாடத்தக்கதே.

* * *

சில சமயங்களில், உடல்வலியில்லாத ஒருவன் தனது தீவிர எழுச்சியினால், தனது வலிமைக்கு அப்பாற்பட்ட ஒரு காரியத்தைச்செய்துவிடுகிறான். ஆனால் செயல் முடிவை நோக்குவோன் நன்கு யோசித்துச் செய்யவேண்டியதைச் சரிவரச் செய்து முடிப்பான். ஒரு நல்ல காரியத்தை முடிக்கமுற்படுவோர் தமக்குப் பல இன்னல்கள் ஏற்படினும்—உயிரையும் அழிக்கக்கூடிய எத்தகைய ஆபத்து வரினும்—அவற்றைப் பொருட்படுத்தாரென்பது நாம் நேரில் அறிந்ததேயாகும். உலகத்தியாகிகளுக்குள் முதன்மை வாய்ந்த, தியாகி யதீந்திரர் தனது ஆவி போயினும் அடிமைக்கு,—மிருகத்தனமாக நடத்தப்படும் கொடிய வாழ்க்கைக்கு—ஆட்பட்டாரா! அங்குல அங்குலமாக தனது உடல் நினைவு நீங்கினான்றோ!

"மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின்"

என்ற பொன்னுரையை நன்கு உலகமறியச் செய்தானன்றோ.

"ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்த [லின் அந்நிலையே
கெட்டா னெனப்படுதல் நன்று"

என்ற வள்ளுவர்மொழி நமது யதீந்திரருக்கு அறிவுறுத்திற்றுபோலும்.

* * *

'முயற்சி திருவினை யாக்கும் முயற்றி
இன்மை புகுத்தி விடும்' [ன்மை

என்பது திருக்குறள்.

எவரும் தாம் செய்த சிறந்த காரியத்தைப்பற்றிக் கூறும்போது, அவ்வினை முடிவு தனது ஆற்றலானே அமைந்ததென்றும், கடவுள் செயலாலாமென்றும் கூறுகின்றனர். இதே மனிதர், தாம் கருதிய வினை முற்றுறாவிடின் 'ஏ! பாழுந்தெய்வமே கண்ணில்லையா; என் காரியம் கைகூடவில்லையே; என ஓலமிடுகின்றனர். காரிய முற்றுறுமைக்குப் பாத்தியப்படும் கடவுள், காரியம் முற்றுப் பெறும்போது அதற்குப் பாத்தியப்படமாட்டாரோ? உண்மையாகக் கூறுமிடத்து, வினை முடிவை எந்தக் கடவுள் தடுக்கிறார். இவன் செய்யும் முயற்சியின் குறையே தடுக்கிறது.

'ஊழையும் உப்பக்கம் காண்பர் உலை [வின்றித்
தாழா துஞற்று பவர்.

என்ற மொழி முயற்சியின் உயர்வை விளக்குகிறது. முயற்சியே ஒருவனது வாழ்நாளில் உலையா உடைமையாகும் என்றும், ஏனைய, உடைமையேயாகாவெனவும்கூறியுள்ளார். மேனாட்டார் இயந்திர உலகத்திலே மிகப் புகழ் வாய்ந்தவராக விளங்குகின்றனர். அவர்களை அவ்வாறாக்கியது அன்னவர்தம் ஊக்கமும் உலையா முயற்சியுமே. மேனாட்டில் சிறந்த பதவியிலிருப்பவரையோ அல்லது சிறந்த அறிவாளியாகவோ தொழிலாளியாகவோ இருப்பவர்களையோ பற்றிக் குறிப்பிடுவோமானால், அன்னவரின் ஊக்கமும் முயற்சியுமே அவர்களை அத்தகைய பெருமித நிலைக்குக் கொண்டுவந்தவையெனக் காண்போம். உலகப் பிரசித்தி பெற்ற தீரம் வாய்ந்த வீரன் நெப்போலியன் எவ்வாறிருந்தான். பிறகு எவ்வாறாயினான். தன் இளமைப் பருவத்தில் எதை விரும்பினானோ, அவ்வாறு தான் ஆவதற்கு வேண்டிய முயற்சிகள் செய்தான். தானாகவே பழகினான். சோம்பலில்லாத மனிதன் யார் என்று வினவினால், அதற்கு பதில் 'நெப்போலியன்' என்ற ஒரே மொழிதான்.

* * *

திருக்குறளிலே 'மடியின்மை' எனும் அதிகாரம் இயைக்கப்பட்டிருக்கும் இடத்தை நோக்கின் மடியின் கொடுமை விளங்கும். ஊக்கத்திற்கும் முயற்சிக்கும் ஒரு பெரிய கூற்று சோம்பல். ஊக்கத்தாலும் முயற்சியாலும் எத்துணை பெருமை யெய்தலாமோ அத்துணை இழிவடையலாகும் சோம்பலினால். ஊக்கமுடைமைக்கும் ஆள்வினையுடைமைக்கும் இடையில் இயைக்கப்பட்டிருக்கிறது.

மடியின் கொடுமையைக் குறிப்பிடுங்கால்,

"நெடுநீர் மறவி மடிதுயில் நான்கும்
கெடுநீரார் காமக் கலன்"

எனக் கூறப்பட்டிருக்கிறது.

மடியானது, குலத்தைக் கெடுக்கும் கோடரி; மானமரியும் வாள்; குணம் கெடுக்கும் கூற்று; இகழ் அளிக்கும் இருட்டு. மேற்கூறிய திருக்குறளின் பொருள்:—"விரைந்து செய்யுங் காரியத்தை நீட்டித்துச்செய்யும் இயல்பு, மடியும், மறப்பும், துயிலும் ஆகிய இந் நான்கும் இறப்போர் விரும்பும் இனிய பொருள்கள்" என்பது. மனித வாழ்க்கைக்கு இறப்பினுங் கொடியது எது? அத்தகைய கொடுமையைக் கொடுக்கும் இவற்றினுங் கொடியன யாவை?

"பொறியின்மை யார்க்கும் பழியன்று [அறிவறிந்
ஆள்வி னையின்மை பழி."

(திருக்குறள்

ராய, சொக்கலிங்கனால் காரைக்குடி "ஊழியன்" அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பெற்றது.

